# ஸ்ரீ குரு
# தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகள்
## சரித்திரம்



வெளியீடு :

ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகள் மடம்

மடப்புரம், ★ திருவாரூர்

சர்வஜித்து 2007

உ

சிவமயம்

ஓம் தத் ஸத் பரப்ரம்மணே நம :



# திருவாரூர், வன்மீகபுரம் என்னும் மடப்புரம்

# ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகள் சரித்திரம்

இஃது

கோவிலூர் ஸ்ரீமத் சிதம்பர ஸ்வாமிகள்
மாணாக்கரும் திருவாரூர் ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி
ஸ்வாமிகள் மடம் அதிபதியுமாயிருந்த

**ஸ்ரீமத் சிவானந்த ஸ்வாமிகள்**

இயற்றியதற்கிணங்க
ஸ்ரீகுரு தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகள் மடம்,
அதிபதிகள் 9வது குரு மகா சந்நிதானம்

**சா.குமரானந்த ஸ்வாமிகள்,**

**சு.பிரமானந்த ஸ்வாமிகளால்**

பத்தொன்பதாம் பதிப்பாக வெளியிடப்பெற்றது.

2007

பத்தொன்பதாம் பதிப்பு
சர்வஜித்து ஆண்டு
2007 ஆகஸ்ட்

**குரு பூஜை விழா**

வருடந்தோறும் ஆவணி மாதம்
உத்திர நட்சத்திரத்தில்
ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளின்
குரு பூஜை விழா வெகு விமரிசையாக
கொண்டாடப்பெறுகிறது.

5000 படிகள்

அண்ணாமலை கம்ப்யூட்டர் பிரஸ்,
3075, கீழ ராஜ வீதி, புதுக்கோட்டை. ☎ 231211

சிவமயம்

ஓம் தத் ஸத் பரப்ரம்மணே நம :

# பத்தாம் பதிப்பின் முகவுரை

பொன்னிமாநதி மன்னி நீழலிற் பன்னலம் தரும் சென்னி நாட்டினில், நீர்வளம் முதலிய பல வளங்களும் நிறைந்த செல்வத் திருவாரூரின் கண்ணே, 109 வருடங்கட்கு முன்னர் அளவின்றிய அற்புதங்கள் தோன்ற எழுந்தருளியிருந்த ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளது சரித்திரம், சிலர் சொற்பம் சொற்பமாக எழுதி வைத்திருந்ததை தருவித்து முறையே கோர்வை செய்து அச்சிட்டு வெளிப்படுத்தினால் யாவரும் படிக்கும்படி நேரிடும்; அங்ஙனம் நேரிடில் ஸ்வாமிகளின் அற்புத மகிமைகள் விளங்கும். விளங்குமாயின் யாவரும் ஸ்வாமிகளிடத்திற் பக்தி செய்து நற்கதி அடைவார்கள் என்று எண்ணாநின்றனம் எனப் பலர் இவன் பால் வந்து கேட்டுக் கொண்டனர். அவர்கள் கருத்துப் போலவே எனது கருத்தும் இருந்தமையால், ஸ்வாமிகளின் சரித்திரக் குறிப்புக்கள் எழுதிவைத்திருக்கும் இடங்களை விசாரித்து, நீடாமங்கலம், நல்லய்ய நாயக்கர் குமாரர் நாராயணசாமி நாயக்கர் அவர்களிடத்திலும், சிக்கல், பொருள் வைத்த சேரி, கரும்பாயிர முதலியார் அவர்களிடத்திலும், நாகபட்டணம் வாணக்காரத் தெரு சுப்பபிள்ளையவர்கள் வீட்டிலும், வசனரூபமாக இருந்தவற்றையும், தஞ்சை சரபோஜி மன்னர் கேட்டுக் கொண்டபடி வித்துவானாகிய உரத்தநாட்டுச் சரித்திரம், நாராயணசாமி நாயக்கரவர்களால் (520) செய்யுள்களாகப் பாடப் பெற்றிருந்ததையும் தருவித்து மேற்படி ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளின் சகோதரராய் நீலப்பாடி மடத்தின் அதிபதியாக இருந்த ஸ்ரீ நமசிவாய ஸ்வாமிகளின் பால் மேற்படி ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளின் பூர்வவிருத்தாத்தங்களை நன்றாய்க் கேட்டுணர்ந்த அவர் சிஷ்யராகிய பொன்னம்பல ஸ்வாமிகளின் வாக்கினாலும், திருவாரூர் பூர்வம் இருந்த பல முதியோர்கள் வாக்கினாலும் யான் கேள்வியுற்றிருந்ததற்கேற்பக் பார்க்கும் போது, வசனரூபமாக

இருந்தும் பாடங்களாக இருந்ததுமாகிய ஏடுகளில் சிற்சில செல்லுண்டு ஜீரணமாகி விட்டமையினாலோ, மற்ற காரணங்களினாலோ ஒன்றைக்கொன்று சிற்சில அற்புதங்கள் தொடர்பின்றியும், குறைவாகவும் இருந்தன. பாடல் ரூபமான பிரதி, பூமிதேவியின் கவத்துக்கு இரங்கிக் கைலாசபதியே குருமூர்த்தமாக ஆவிர்ப்பவித்தது எனவும், ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகள் அயோநிஜரெனவும் கூறுகின்றது. வசனரூபமாக உள்ள பிரதிகள் அனைத்தும் மாதாவின் வயிற்றினின்றும் உற்பவித்தாக, யாம் கேள்வியுற்றபடியே கூறுகின்றன. இங்ஙனம் கூறுகின்ற இவ்விரண்டில், ஸ்வாமிகளின் சகோதரராகிய நமசிவாய ஸ்வாமிகள் நீலப்பாடியிலிருந்ததாக விளங்குகின்றமையால் பாடல் ரூபப்பிரதியில் கைலாயத்திலிருந்து சிவபெருமானே தக்ஷிணாமூர்த்தி என்னுங் குருமூர்த்தமாக வந்தது எனக் கழறியுள்ளதை மாத்திரம் விடுத்து மற்றவைகளையும், வசனரூபப் பிரதிகளிலுள்ளவற்றையும் பார்த்து இருவகைப் பிரதிகளிலும் ஏடுகள் செல்லுண்டு அக்ஷரங்கள் அருபமாய் விட்டமை பற்றிப் பல அற்புதங்கள் நன்றாய் விளங்காமையால் அவற்றை விடுத்து, முன் நடந்தது பின்னரும் பின் நடந்தது முன்னருமாக மயங்கியிருந்தவற்றை கேள்வியினால் யான் தெரிந்து கொண்ட வரையில் திருத்தியும், விளக்கியும் ஒழுங்கு படுத்திப் பாடல் ரூபமாக இருக்கில் தக்க கல்விமான்களுக்குப் பயன்படுமேயன்றிச் சாமான்யக் கல்விமான்களுக்கும், ஸ்திரீகளுக்கும் பயன்படுவது மிகவும் அருமையாக இருக்கும். வசனரூபமாகவேயிருக்கில் யாவருக்கும் எளிதாகப் பயன் பெறும் எனக்கருதி இதனை அச்சிடுவிக்கலானேன்.

இச் சரித்திரத்தில் சொற் குற்றம், பொருட் குற்றம் முதலியவை இருக்கினும், பெரியோர்கள் மன்னித்துக் கொள்ள வேண்டுமென வந்தனம் செய்து கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,

சிவானந்த ஸ்வாமிகள்

1945

மதுரை

# பதிப்புரை

சுமார் நூறு ஆண்டுகட்கு முன்னர், இம் மடத்தில் அதிபராக எழுந்தருளியுள்ள ஸ்ரீமத் மதுரை சிவானந்த ஸ்வாமிகள், மிகப் பிரயாசையுடன் ஸ்ரீ குரு தக்ஷிணா மூர்த்தி ஸ்வாமிகளின் திவ்விய சரிதக் குறிப்புக்களைத் திரட்டிப் புத்தக வடிவில் இயற்றியருளினார்கள். இதுவரை பதினாறு பதிப்புகள் வெளி வந்துள்ளன. பதினேழாம் பதிப்பாக இதனை வெளியிடுகின்றோம்.

கால தேச வர்த்தமானத்தை அனுசரித்து, எல்லோ ரும் எளிதில் உணர்ந்து கொள்ளுமாறு சிற்சில இடங்களில் வார்த்தைகளை மட்டிலும் மாற்றி அமைத்துள்ளோம்

இந்நூல் பதினாறு பதிப்புகள் வெளிவந்திருப்பதி லிருந்தே, ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளிடத்தில் மக்கள் கொண்டுள்ள அன்புப் பெருக்கை ஒருவாறு ஊகித்து அறியலாம். நேரில் தெரிசிப்பவர்கள் அநுபவித்து அறியலாம்.

அன்பர்கள், மேன்மேலும் ஸ்வாமிகளிடத்து மாறாத அன்பு கொண்டு கிருபா கடாட்சம் பெற்று, சகல சௌ பாக்கியங்களும் பெருகப் பெருவாழ்வு வாழ்வார்களாக.

இங்ஙனம்,
ச.ஏ. குமாரானந்த ஸ்வாமிகள்
ச. பிரமானந்த ஸ்வாமிகள்
அதிபதிகள்

ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி
ஸ்வாமிகள் மடாலயம்,
மடப்புரம் – திருவாரூர் 610 002.
ஈஸ்வர ஐப்பசி
1997 – அக்டோபர்
போன் : 22732

ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகள் ஜீவசமாதி

**தவத்திரு. வீர.சு.ஷண்முகானந்த சுவாமிகள்**

ஆட்சிக்காலத்தில்
தற்பொழுது இருக்கும் நிலைக்கு விரிவுபடுத்தப்பட்டு
முழுவதுமாக கல்திருப்பணியாக
புதிதாக நிர்மாணிக்கப்பெற்று
விரோதிகிருது வருடம் ஆனி மாதம் 21ம் நாள்
**5.7.1971** முதல் கும்பாபிஷேகம் செய்யப்பெற்றது.

---

தற்பொழுது உள்ள குரு மகா சன்னிதானங்கள்
தவத்திரு. **சா.குமரானந்த ஸ்வாமிகள்,**
தவத்திரு. **ச.பிரமானந்த ஸ்வாமிகள்**
இவர்கள் காலத்தில்
அட்சய வருடம் ஆனி மாதம் 29ம் நாள்
13.7.1986-இல் 2வது கும்பாபிஷேகமும்
வெகுதான்ய வருடம் ஆனி மாதம் 17ம் தேதி
1.7.1998-இல் 3வது கும்பாபிஷேகமும்
வெகுசிறப்பாக நடைபெற்றது.

# ஆசிரிய விருத்தம்

சீர்கொண்ட கலியில்நா லாயிரத் துத்தொளா
யிரமுமுப் பத்தாறுமாய்ச்
செல்லுமன் மதவருட மாதம்ஆ வணிதனில்
தேதிபனி ரண்டாவதில்
திகழ்புந்தி வாரமே பூர்வபட் சந்திரிதி
யைத்திதியி லுத்திரத்தின்
சேர்பகற் பதினைந்து நாழிகைவி ருச்சிகத்
திவ்வியவி ராசிவேளை

ஏர்கொண்ட அன்பர்நின் றேத்துந் தியாகேச
இறைவர்வாழ் ஆரூரினில்
இன்னாடு நன்னாடு பன்னாடு மென்னாடு
எனச் சரிதை யிற் சிறந்தே
எந்தையரு கிற்கிரியை யுற்றநற் சாதனமி
சைந்துயோ கத்தினெறியே
ஏகியட் டாங்கமுட னைந்தவத் தையும்தனி
லேழ்ஞான பூமியும் போய்

பேர்கொண்ட மாயைதனி லீசனும் வித்தையிற்

பிரதிபிம் பிக்குமுயிரும்

பெற்றவிட் சேபமதில் வருபூத வுலகமும்

பிரகிருதி கற்பனையெனப்

பேரருட் பூரணப் பொருளென்ப தேகமே

பேசினது நாமாகுநம்

பிரிவற்ற பதமெனும் சச்சிதா னந்தமாய

பேசரிய மோனவடிவம்

வார்கொண்ட வேதாந்த சித்தாந்த சமரசம்

வளர்மகிமை யோதவசமோ

மாட்சியுறு நீட்சிபுரி காட்சியினி னீட்சித்து

மாணவர்க் கருள்புரிந்து

மன்னுஞா னானந்த வாசாம கோசரம்

வாய்ந்த சிவபதமேவிய

மாசிலாக் குருதக்ஷிணா மூர்த்தி சாமிபொன்

மலரடிகள் போற்றி போற்றி



திருவாரூர் - மடப்புரம்
ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள்



ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள்
ஜீவசமாதி மூலவர்




ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள்
ஜீவசமாதி நுழைவு வாயில்



ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள்
ஜீவசமாதி முகப்பு தோற்றம்




1875 - 1903

தவத்திரு பொன்னம்பல சுவாமிகள்



*1903 - 1907*

தவத்திரு சிவானந்த சுவாமிகள்



1907 - 1913

தவத்திரு சின்ன சுவாமிநாத சுவாமிகள்



*1913 - 1931*

தவத்திரு வீர சுப்பையா சுவாமிகள்



1979-1984

தவத்திரு சதானந்த சுவாமிகள்



**1984** முதல் தற்போது பட்டத்தில் உள்ள இருபெரும் குருமகா சந்நிதானங்கள்

தவத்திரு குமாரானந்த சுவாமிகள் - தவத்திரு பிரமானந்த சுவாமிகள்

உ

சிவமயம்

# ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகள் சரித்திரம்

*முத்துக்கக் கடல்கடத்தும் புணையது ஆகி,*
*மோனம் எலாம் கடந்தபர மோனம் ஆகி,*
*எத்திக்கும் நிறைந்தபரி பூர்ணம் ஆகி,*
*இகபரம் ஆம் உலகு அனைத்தும் எழுதற்கு ஆன*
*வித்துக்கும் வித்து ஆகிப், பரம்ஆய்ச் சுத்த*
*வெளிஆகி, வன்மீக புரத்தின் மேவிச்*
*சத்துசித்து ஆனந்த மயமாய் நிற்கும்*
*தக்ஷிணா மூர்த்திபதம் தலைமேல் கொள்வோம்.*

பொன்னி நன்னதி புடையே பிரவாகித்து வரும் காரணத்தால், நீர்வளம், நிலவளம் முதலிய சகல வளங்களும் நிறைந்து ஓங்குவதும், எந் நாட்டினும் மிக்க நன்நாடாம் சோணாட்டிற்குச் சிரமாக விளங்குவதும் ஆகிய திரிசிரபுரத்துக்கு அருகில் கீழாலத்தூர் என்னும் பெயர் பெற்ற சிற்றூரின் கண், சற்றேரக் குறைய இருநூறு வருடங்களுக்கு முன் கார்காத்த வேளாளர் மரபில், கல்வி அறிவு ஒழுக்கங்களிலும் குரு லிங்க சங்கம பக்தியிலும் சிறப்புற்ற சிவசிதம்பரம் பிள்ளை என்பார் ஒருவர் இருந்தனர். அவரும் அருந்ததியன்ன கற்புடைய அன்னார் மனைவியாகிய

மீனாம்பிகை அம்மையாரும் ஒன்றுபட்ட கருத்தும் அன்பும் உடையராய் நெறி வழுவாது இல்லற தர்மத்தை இனிதே இயற்றி வந்தனர்.

அவர்கள் இருவரும் தமது மரபுக்குரிய சிவபூஜை முதலான சைவ அனுட்டானங்களை மிக்க சிரத்தையோடு செய்து வந்ததன்றியும்,

*"பெறும் அவற்றுள் யாம் அறிவது இல்லை அறிவு அறிந்த மக்கட் பேறு அல்ல பிற"*

என்னும் ஆன்றோர் வாக்கைக் கருத்தில் கொண்டு இம்மை மறுமைப் பயன்களை அளிக்கத்தக்க நன் மகப்பேற்றை நாடிப் பல நோன்புகள் இயற்றியும், புண்ணிய க்ஷேத்திர யாத்திரை, தீர்த்த ஸ்நானம், ஸ்தல வாசம், மூர்த்திகள் தரிசனம், பெரியோர் சேவை முதலியன செய்து கொண்டும் வரும் நாளில், நானிலம் போற்றும் நடு நாட்டின் கண் நம்மனோர் உய்யுமாறு அருட்கடலாகிய நம்பெருமான் சோதிமலையாக நின்றருளும் திருவண்ணாமலை என்னும் திருப்பதியை அடைந்து, அத்தலத்தில் சில நாட்கள் வாசம் செய்து ஆங்குள்ள தீர்த்தங்களில் முழ்கியும், கிரிப் பிரதக்ஷிணம் வந்தும் மகப்பேறு விரும்பிய மனத்தினராய் அண்ணாமலைப் பெருமானையும் உண்ணாமலை அம்மையையும் வழிபட்டு வந்தனர்.

ஓர் நாள் இரவு ஸ்ரீ அண்ணாமலைப் பெருமான் இருவர் கனவிலும் அடியவர் உருவில் தோன்றி "மகப்பேறு இல்லாத உங்கள் மனக்குறையை நாமே வந்து நீக்குவோம்; நீவிர் நும் ஊரைச் சேருங்கள்" எனத் திருவாய் மலர்ந்து அருளியது கண்ட இருவரும் விழித்து எழுந்து தாம் கண்ட

கனவு நிகழ்ச்சியைக் கலந்து பேசிக் கொண்டு அண்ணாமலையாரின் அருள்திரத்தை வியந்து போற்றி ஆனந்த பரவசராகி, மறுநாட் காலையில் ஆலயம் சென்று விதிப்படி வழிபட்டுத் தங்கள் இடம் சேர்ந்து ஸ்ரீ அண்ணாமலையண்ணலைத் தியானித்து வந்தனர்.

இவ்வாறு சில நாட்கள் செல்ல, மீனாம்பிகை அம்மையார் வயிறு வாய்த்து, திங்கள் பத்தும் சென்ற பின்னர் உத்தமமாகிய சுபதினத்தில், உலகில் உள்ள சர்வ ஆன்மாக்களும் உய்யவும், சைவம் முதலிய சமயங்கள் ஓங்கி சமயாதீதப் பேற்றைப் பெறவும், வலம்புரி ஈன்ற நல் முத்தென ஓர் புத்திரனைப் பெற்றனர். சிவசிதம்பரம் பிள்ளை பெரு மகிழ்ச்சியுடன் குழந்தைக்குச் செய்ய வேண்டிய ஜாத கன்மங்களை முறையாகச் செய்து ஸ்ரீ அருணாசலேசுவரர் அருளால் தோன்றிய மகவு ஆதல் பற்றி "அருணாசலம்" எனப் பிள்ளைத் திருநாமம் இட்டனர்.

புதைப்பொருள் கண்ட மிடியர் போல அப்புதல்வனை மாதா பிதாக்கள் இருவரும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தனர். மீனாம்பிகை அம்மையார் இரண்டாவது வருடத்தில் மீண்டும் கர்ப்பமுற்று மற்றொரு புத்திரனைப் பெற்றனர். அப் புத்திரனுக்கும் ஜாத கன்மங்களை விதிப்படி செய்து நமச்சிவாயம் என நாமஞ்சூட்டி, இரு மைந்தர்களையும் மிக்க அன்புடன் பாதுகாத்து வளர்த்து வந்தனர்.

மூத்த குமாரனாகிய அருணாசலம் என்னும் அருமைக் குழந்தை பிறந்தது முதல் பசி முதலியன பற்றி உரோதனம் செய்தலும், ஒன்றை நோக்கிப் பயந்து ஒலியிட்டு அழுதலும்,

ஒன்றை நோக்கிச் சிரித்தலும் இலனாய், பாயல் தொட்டில் முதலியவற்றில் கண்களைச் சிலபோது முகிழ்த்தும், சிலபோது மலர்த்தும், ஒன்றையும் விசேடமாக உற்றுப் பாராமலும் மௌனமாகவும் சயனித்திருக்கும். மாதா மடியில் இருத்தி மார்புக் காம்பை வாயில் வைத்தால் சுவைத்துப் பாலருந்தும், அல்லாவிடின் மௌனமாகவே இருக்கும். இங்ஙனம் குப்புற்று எழுந்து தவழ்ந்து நின்று நடக்கும் பருவ காலங்களிலும் சில சமயங்களில் பத்மாசனம் போட்டுக் கண் முகிழ்ந்து நிட்டை புரியும். சில நேரங்களில் உபசாந்தமாகிய பேரமைதியுடன் மௌனமாகவே இருக்கும்.

ஸ்ரீ அருணாசலேசுவரர் அனுக்கிரகத்தால் பிறந்த குழந்தை ஐந்து வயதாகியும் வாய்திறந்து பேசாதிருப்பது குறித்து மாதா பிதாக்கள் இருவரும் மனவியாகூலம் அடைந்து இதுவும் நமது தவக்குறை தானோ என்று சிந்தை நொந்து திருவருளையே தியானித்து வந்தபோது ஓர்நாள் ஸ்ரீ அண்ணாமலையண்ணல் கிருபை கூர்ந்து இவர்கள் மனக்குறையை நீக்கும் பொருட்டு, சடா முடியும் துவராடையும், விபூதி உருத்திராக்க தாரணமும் உடைய புனிதத் துறவியர் உருக்கொண்டு சிவசிதம்பரம் பிள்ளை முன் தோன்றினர்.

சிவயோகியாரின் வரவால் சிந்தாகுலம் நீங்கிய சிவசிதம்பரம் பிள்ளை சிவயோகியாரின் முன்சென்று நமஸ்கரித்து கைகட்டி வாய்புதைத்து நின்று "ஸ்வாமின்! ஸ்ரீ அண்ணாமலைப் பெருமானின் அநுக்கிரகத்தால் தோன்றிய அடியேனுடைய அருமைப் பாலகன் ஒருவன் ஐந்து வயதாகியும் வாய்திறந்து பேசாமல் ஊமையாகவே இருக்கின்றான். அக்குழந்தை மாதா பிதா மனம் குளிர

மழலைச் சொல் வழங்கும்படி அநுக்கிரகஞ் செய்ய வேண்டும்'' எனப் பிரார்த்தித்து பின்னரும் அவர் திருவடியில் நமஸ்கரித்தனர். துறவராக வந்த பெருமான் "அந்த அற்புதக் குழந்தையை நாம் பார்ப்போம்'' என்று அருளிச் செய்யலும். சிவசிதம்பரம் பிள்ளை சிவயோகி யாரை வீட்டின் உள்ளே அழைத்துச் சென்று தம் தவப் புதல்வனைக் காட்டினார். அவ்வமயம் அக்குழந்தை ஆதனம் போட்டுக் கண்களை மூடி நிட்டையில் இருக்கக் கண்ட சிவயோகியார் சிவசிதம்பரம் பிள்ளையை நோக்கி, "இக்குழந்தை பெற்றோர்களாகிய உங்களையும், உங்கள் குலத்தார்களையும் உலகத்தில் உள்ள பக்த ஜனங்களையும் நற்கதியில் சேர்க்கும் பொருட்டு உங்கட்குப் பிள்ளையாகத் தோன்றியிருக்கிறான்; இவன் ஊமன் அல்லன்; இப்பொழுது நீவிர் உம் பாலகனோடு பேசுக'' எனலும், சிவசிதம்பரம் பிள்ளை "அப்பா குழந்தாய்! ஏன் கண்களை மூடிக் கொண்டிருக்கிறாய்? என வினவினார். அதற்கு தெய்வீகக் குழந்தையான திருப் புதல்வன் "சும்மா இருக்கின்றேன்'' என விடை இறுத்தனன். துறவராகிய முனிவர் "சும்மா இருக்கின்ற நீ யார்?'' என்றார். ஞானக்குழந்தை தமது நிலை கலையாது முன் இருந்தபடியே முகிழ்த்த கண் திறவாமல் "நீயே நான்; நானே நீ'' எனப் பதில் இறுத்தது. இங்ஙனம் விடைபெற்ற முனிவர் "சத்தியம் சத்தியம்'' எனக் கூறித் தம் திருவுருக்கரந்தனர். இவ் அற்புதத்தைக் கண்ணுற்ற மாதா பிதாக்கள் இருவரும், புத்திரனை பேசுவிக்கும் படியாக எழுந்தருளி வந்தவரும் புத்திரனாக விளங்குபவரும் உண்ணாமுலை உடன் ஆகிய ஸ்ரீ அண்ணாமலை யண்ணலே எனக் கருத்திற் கொண்டு மிகுந்த பக்தி சிரத்தையுடன் திருவுளக் குறிப்பறிந்து போற்றி வந்தனர்.

ஓர் நாள் சிவசிதம்பரம் பிள்ளை தன் மனையாளிடத்தில் "யான் திரிசிரபுரம் சென்று தாயுமானாரைத் தரிசித்து வருகிறேன். குழந்தைகளைப் பதனமாய்ப் பார்த்துக்கொள்க" என்று சொல்லிய காலையில், அருட்புதல்வரான அருணாசலம் "ஐயா! இன்று பத்து நாழிகைக்குள் உம்மைப் பார்ப்பதற்காக உறவினர் இருவர் இவ்விடம் வருவார்கள்" என்றனன். அதன்படியே சிவசிதம்பரம் பிள்ளை தமது பிரயாணத்தை நிறுத்திக் கொண்டார். உறவினரும் குறித்தபடி வந்தனர்.

இவ்வாறு ஓரோர் சமயத்தில் திரிகால வர்த்த மானங்களையும் உணர்ந்து உரைக்கும் தன்மையுடைய வராயிருந்தமையால் மாதா பிதாக்கள் இருவரும் எக்காரியமும் தம் தவப்புதல்வரிடம் தெரிவித்து அவர் உத்தரவுப்படியே நடந்து வருவாராயினர்.

ஒரு சமயம் தில்லைத்தலம் சென்று ஆருத்ரா தரிசனம் காண விரும்பிய சிவசிதம்பரம் பிள்ளை, ஸ்வாமிகளை அணுகி விடைதரல் வேண்டும் எனக் கோரினர். அதற்கு ஸ்வாமிகள் "நாளை இருபது நாழிகை அளவில் உமது மாதா தேகவியோகம் அடைகின்றாள்"என அருளிற்று. "எனது மாதா எவ்வித நோயும் இன்றி சரீர சவுக்கியத்துடன் இருக்கின்றாளே. எந்நிமித்ததால் தேகவியோகம் ஆவாள்" என்று பிதாவானவர் வினவ, ஸ்வாமிகள். "புரை ஏறி விக்கல் உதயமாவதினால்" என்றது. ஸ்வாமிகள் திருவாக்கின் வண்ணம் மறுநாள் சிவசிதம்பரம் பிள்ளையின் மாதா தேகவியோகம் ஆயினள்.

நமசிவாயம் என்னும் இளைய மைந்தரைப் பள்ளிக்கு வைக்கும் பருவம் வந்தது. அதற்கு வேண்டிய

சாமக்கிரிகைகளைச் சேகரித்து உபாத்தியாயரை அழைத்து வந்து வித்தியாரம்பம் செய்விக்கத் தொடங்குகால், ஸ்வாமிகள் பிதாவை நோக்கி "ஐயா! நம்மை ஏன் பள்ளிக்கு வைக்கவில்லை" என்று வினவ, சிவசிதம்பரம் பிள்ளை ஸ்வாமிகள் முன் வணக்கமுடன் நின்று "சகலமும் தெரிந்த சர்வக்ஞராகிய ஸ்வாமிகளையும் பள்ளிக்கு வைக்க வேண்டுமோ? வேண்டுமாயின் அங்ஙனமே ஏற்பாடு செய்கிறேன்" என்று வேண்டிய ஏற்பாடுகள் செய்து ஸ்வாமிகளையும் முறைப்படி பள்ளியில் சேர்த்தனர்.

அற்றைநாள் முதலாக ஸ்வாமிகள் தம் தம்பியாகிய நமசிவாயத்துடன் பள்ளிக்குச் சென்று வரும். பள்ளியில் மற்ற பிள்ளைகளோடு சேர்ந்து இருப்பினும் அவர்களைப் போல அல்லாமல் உபாத்தியாயர் இருப்பினும் இல்லாதிருப்பினும் தான் வேறு ஒன்றையும் நோக்காமல் சுவடியைக் கையில் ஏந்தியபடி பார்த்துக் கொண்டிருக்கும். சில சமயம் சுவடியைக் கட்டித் தன் முன்பாக வைத்து விட்டுக் கண்ணை மூடிக்கொண்டு நிட்டையில் அமர்ந்திருக்கும். இவ்வாறு அமர்ந்திருக்கும் ஸ்வாமிகளைப் பார்த்து உபாத்தியாயர், "தம்பி! கண்களை மூடிகொண்டிருக்கிறாயே, படிக்க வேண்டாமோ?" என்றால் ஸ்வாமிகள் "படித்தாயிற்று" என்று பதில் சொல்லும். "படித்ததைச் சொல் கேட்போம்" என்று உபாத்தியாயர் கேட்டால், ஸ்வாமிகள் சுவடியை பாராமல் பிழையின்றி ஒப்புவிக்கும். உபாத்தியாயர் மிகவும் சந்தோஷம் அடைந்து மற்றொரு சுவடியைத் துவக்கிக் கொடுப்பார். அந்தச் சுவடியையும் ஸ்வாமிகள் ஒருமுறை பார்த்து விட்டு நிட்டையில் அமர்ந்து விடும். "புதிய பாடம் படித்தாயிற்றா" என உபாத்தியாயர்எப்பொழுது கேட்டாலும் "ஆயிற்று" என்றே பதில் கிடைக்கும்.

ஒருநாள் ஸ்வாமிகள் உபாத்தியாயரை நோக்கி "ஐயா! உங்கள் குழந்தை வீட்டுத் திண்ணையிலிருந்து கீழே விழுந்ததால் கைஒடிந்து விட்டது; போய் பார்த்து வாருங்கள்" என்று சொல்லிற்று. உபாத்தியாயர் உடனே எழுந்து வீட்டுக்குச் செல்லும் வழியில், அவரை அவசரமாக அழைப்பதற்காக வீட்டிலிருந்து வேலையாள் விரைந்து வந்தான். உபாத்தியாயர் அவனிடம் விஷயங்களை விவரமாக அறிந்து வீட்டுக்குச் சென்று, காலம் தாழ்த்தாமல் குழந்தைக்கு வேண்டிய சிகிச்சைகளைச் செய்து முடித்துப் பள்ளிக்கு வந்து ஸ்வாமிகள் முன்பாக வணக்கமுடன் நின்று "சகலமும் உணர்ந்த சர்வக்ஞராகிய ஸ்வாமிகள் பள்ளியில் வந்து படிக்க வேண்டிய காரணம் யாது உளது? ஏன் பள்ளிக்கு வரவேண்டும்?" என வினவ, ஸ்வாமிகள் "சும்மா வந்து போகிறேன், நீங்கள் நிற்க வேண்டாம் அமருங்கள்" எனத் திருவாய் மலர்ந்தது. என்றாலும் ஸ்வாமிகளுக்கு முன் தனது ஆசனத்தில் அமராமல் பூமியிற்றானே அமர்ந்தார். இவ்வாறு ஸ்வாமிகள் பள்ளிக்கு எழுந்தருளும் காலத்தில் உபாத்தியாயர் எழுந்து நின்று மரியாதை செய்வதும் இருக்கும்படி உத்தரவு கிடைத்த பிறகே உட்காருவதும் வழக்கமாகி விட்டதைக் கண்ணுற்ற ஸ்வாமிகள் பள்ளிக்கு வருவதை நிறுத்தி விட்டது. உலக வழக்கை அனுசரித்துப் பள்ளிக்குச் சென்று வந்தது மூன்று மாத காலமேயாகும்.

தம்பி நமச்சிவாயமும் ஒரு வருடம் வரை பள்ளியில் பயின்ற பின்னர், வீட்டிலேயே இருந்து தந்தை சிவசிதம்பரம் பிள்ளையினுடைய சிவபூஜைக்கு வேண்டிய உபகரணங்களைச் சேகரித்துக் கொடுத்தான். ஒருநாள் ஸ்வாமிகள் நமச்சிவாயத்தைப் பார்த்து "நீ பிள்ளையார்

கோவில் நந்தவனத்திற்குச் செல்லும் வேளையில் அங்கு தேங்காய் மாங்காய் கீழே வீழ்ந்து கிடந்தால் எடாதே. எடுத்தால் சிவபராதி ஆவாய்" என அருளிற்று.

நமசிவாயம் சிறுவனாய் இருந்தபடியால் ஒருநாள் நந்தவனம் சென்றிருந்த காலத்தில் அங்கு தரையில் கிடந்த தெங்கின் நெற்றைக் கண்டு அவா மிகுதியில் மூத்தோர் வார்த்தையை மறந்து அதனை எடுத்து உரித்து உடைத்துத் தின்றுவிட்டு பின் வழக்கம் போல் பத்திர புஷ்பங்களைச் சேகரித்துக் கொண்டு இல்லம் சேர்ந்தனன். இந்நிகழ்ச்சியைத் தாமாகவே உணர்ந்து கொண்ட ஸ்வாமிகள் "அப்பா நமசிவாயம்! இன்று நந்தவனத்தில் நீ செய்த அபராதம் கங்கா ஸ்நானம் செய்து விஸ்வேசுவரரையும் தரிசித்தால் அன்றி நிவர்த்தியாகாது" என்று அருளி "இனிமேல் நீ பூஜைக்கு பத்திர புஷ்பம் எடுக்க வேண்டாம்; ஐயா எடுத்துக் கொள்வார்" எனக் கட்டளையிட்டது.

அது முதல் நமசிவாயம் மிகவும் வியாகூலம் அடைந்து சில நாட்கள் சென்றதும் யாரிடத்தும் அறிவிக்காமல் காசி யாத்திரை சென்றுவிட்டான். தாயும் தந்தையும் சிறுவன் நமசிவாயத்தைக் காணாது, தெரிந்த இடங்களுக்கெல்லாம் ஆள் அனுப்பித் தேடியும் ஒரு தகவலும் கிடைக்காமல் ஸ்வாமிகள் முன் சென்று கவலையோடு விவரமாக விண்ணப்பித்து கொண்டனர். ஸ்வாமிகள் புன்னகை செய்து "நீவிர் முற் பிறவிகளில் பெற்றெடுத்த பிள்ளைகள் எல்லாம் இப்பொழுது உங்களை பிரிந்து இருக்கிறார்களே, அவர்களைப்பற்றி நீங்கள் கவலைப்படவில்லையே! சிறுவன் நமசிவாயத்தைப் பற்றி மாத்திரம் கவலை கொள்வது ஏனோ? தம்பி நமசிவாயம் இப்போது காசி யாத்திரை சென்று கொண்டிருக்கிறான்;

நீங்கள் அழைக்கினும் வாரான். அவன் இனிமேல் கிரு
ஆச்ரமத்தை விரும்பவும் மாட்டான்; அதனால் நீங்கள்
நன்மையே அடைவீர்கள்; நமசிவாயத்தைப் பற்றிக் கவலை
நீங்கியிருங்கள்'' எனத் திருவாய் மலர்ந்தது.

நமசிவாயம் காசியம்பதியை அடைந்து தினமும் தவறாமல் புனித கங்கையில் நீராடி விஸ்வேசுவரர் விசாலாட்சி, அன்னபூரணி ஆகிய மூர்த்திகளைத் தரிசனம் செய்து கொண்டு சில காலம் அங்கு தங்கியிருந்தனன் பின்னர் தென் திசை நோக்கிப் பிரயாணமாகி, காஞ்சி சிதம்பரம் முதலிய தலங்கள் தோறும் தங்கித் தரிசனம் செய்து கொண்டு திருச்செங்காட்டங்குடி சேர்ந்தனன். அங்கு அருவுருவத் திருமேனி கொண்டு எழுந்தருளிய பெருமானையும் பிராட்டியையும் தரிசித்து சில நாட்கள் இருந்து வரும்பொழுது, தரிசனம் செய்வதற்காக அவ்விடம் வருகை புரிந்த அடியார் ஒருவரைக் கண்டு அவருடன் சேர்ந்து புறப்பட்டுக் கீழ்வேளூர் என்னும் திருப்பதிக்கு அருகில் உள்ள நீலப்பாடி என்னும் ஊரைச் சேர்ந்தனன் அவ்வூரில் கல்வி அறிவு ஒழுக்கங்களில் சிறந்தவரும் அபேத சாக்ஷாத்கார ஞானம் பெற்றவருமான மஹான் ஒருவரை அணுகித் தொண்டு செய்து, விதிப்படி அவர்பால் சந்நியாசம் பெற்று ஞான சாஸ்திர விசாரம் செய்து வந்தனன்.

இவ்வண்ணம் ஸ்வாமிகளின் இளையராகிய நமசிவாயம் காசியாத்திரை புறப்படுவதற்கு முன் கீழாலத்தூரை அடுத்த ஓர் சிற்றூரின் கண் உள்ள ஆராவமுத அய்யங்கார் என்பவர் தமக்கு ஐம்பது வயது ஆகியும் புத்திர பாக்கியம் இல்லாமல் மனக்கிலேசமடைந்தவராய், அவரது பத்தினியாகிய இலக்குமி அம்மாளுடன் திருவரங்கம் என்னும் ஸ்ரீரங்கப்பதி அடைந்து தினமும் காவிரி ஆடி

அரங்கநாதரைத் தரிசித்துக் கொண்டு சில காலம் வசித்து வந்தனர். ஓர்நாள் அரங்கப்பெருமான் அவர்கள் கனவில் தோன்றி " உங்கள் ஊருக்குப் பக்கம் உள்ள கீழாலத்தூரில் ஞானசித்தன் ஒருவன் அவதரித்திருக்கின்றான்; அவனுக்கு நீங்கள் மனம் நிறைந்த அன்புடன் ஓர் பசுவைக் குளிப்பாட்டி இருவரும் ஸ்நான சந்தி முடித்து, உலர்ந்த வஸ்திரம் தரித்து, பரிசுத்தமான இடத்தில் பசுவை மேய்த்து, சுத்தமான பாத்திரத்தில் பால் கரந்து, மதுரமாகக் காய்ச்சித் தினந்தோறும் கொடுத்து வருவீர்களாயின், அச்சித்தன் அதனை அருந்தி ஒரு நாள் அப்பாலில் சிறிது சேடமாக வைப்பான்; அதை எடுத்து வந்து பயபக்தியுடன் நீங்கள் இருவரும் உட்கொண்டால் அதன்மேல் புத்திர சந்தானம் பெறுவீர்கள்" எனக் கூறினார். ஆராவமுத அய்யங்காரும் இலக்குமி அம்மாளும் பெருமகிழ்ச்சியுடன் தங்கள் இல்லம் ஏகி, அரங்கநாதப் பெருமான் அனுக்கிரகித்த வண்ணம் கீழாலத்தூர் சென்று ஸ்வாமிகளைத் தரிசித்து, கனவில் கட்டளை பெற்ற வண்ணம் அந்தரங்க சுத்தியுடன் ஸ்வாமிகளுக்குப் பால் கொடுத்துக் கொண்டு வந்தனர். ஆறாவது தினத்தில் ஸ்வாமிகள் பாலில் சிறிது மட்டும் உட்கொண்டு பாக்கியை வைத்து விட்டு "இனிமேல் பால் கொண்டுவர வேண்டாம்" எனத் திருவாய் மலர்ந்தருளியது. ஸ்வாமிகள் உச்சிஷ்டமாக வைத்துவிட்ட பாலைத் தம்பதிகள் இருவரும் எடுத்து அமுதமெனப் பருகினர். அது முதல் இலக்குமி அம்மையாரும் கர்ப்பந் தரித்துப் பத்துத் திங்களில் பாலகனைப் பெற்றெடுத்தனர். ஸ்வாமிகளின் அருட் கடாட்சத்தை நினைத்து தம்பதிகள் இருவரும் அடிக்கடி குழந்தையுடன் சென்று ஸ்வாமிகளைத் தரிசித்து வருவர். ஒருநாள் குழந்தை தொட்டிலில் அயர்ந்து நித்திரை செய்தபடியால் நித்திரைக்கு இடையூறு செய்யவேண்டாம்

எனற மனத்தராய் குழந்தையை தொட்டிலில் விட்டுத் தாங்கள் மாத்திரம் ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்தனர். ஸ்வாமிகள் ஆராவமுத அய்யங்காரைப் பார்த்து "உங்கள் வீட்டில் நெருப்பு பற்றிக்கொண்டது; குழந்தை தொட்டிலில் தூங்குகிறதே; ஓடுங்கள்! ஓடுங்கள்!! பயம் வேண்டாம். குழந்தை சுகமாக இருக்கிறது" என்று அருளியது. ஆராவமுத அய்யங்காரும் அவர் மனையாளும் மனக்கலக்கத்துடன் ஓடிச்சென்று இல்லத்தைச் சேர்வதற்கு முன்னரே. வீட்டில் நெருப்புப் பற்றி எரிவதைக் கண்ட ஊர்ஜனங்கள் திரண்டு வந்து வீடு பூட்டப் பெற்றிருந்தமையால் உட்செல்ல இயலாது கூரைமீது ஏறிச் சென்று நெருப்பை அணைக்க எத்தனம் செய்து கொண்டிருந்தனர். அவ்வேளையில், அங்கமெல்லாம் விபூதி அணிந்தவரும் இலங்கோடு கௌபீனம் தரித்தவருமான சிறு பிராயமுள்ள துறவி ஒருவர் தொட்டிலில் கிடந்த பாலகனைத் தூக்கிக்கொண்டு வெளியில் ஓடிவந்து கூட்டத்தில் வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்ற பிராமணப் பெண்ணிடம் கொடுத்துவிட்டுக் கூட்டத்திற் கலந்து மறைந்தனர். பின்னர் வந்து சேர்ந்த அய்யங்கார் தம்பதிகள் வீடு பூட்டியபடியே இருக்க சுற்றிலும் நெருப்பினால் சூழப்பட்டிருப்பதைக் கண்டு, குழந்தையின் கதி என்ன ஆயிற்றோ? என்று அலறி அடித்துக் கொண்டு தெருவில் விழுந்து புரண்டு அழுதனர். குழந்தையை கையில் வைத்திருந்த பிராமணப் பெண் ஓடி வந்து "இதோ உங்கள் குழந்தை சுகமாயிருக்கின்றது; வருந்தாதீர்கள்" என்று குழந்தையை மாதாவிடம் கொடுத்தனள். அருந்தவ மைந்தனை அடைந்த பெற்றோர்கள் கட்டி அணைத்து உச்சி மோந்து ஆனந்த பரவசமடைந்து அப்பெண்ணைப் பார்த்து "வீடு பூட்டியபடி வெந்து கொண்டிருக்கிறதே குழந்தையை

எவர், எவ்வாறு வெளியிற் கொண்டு வந்தனர்" என்று கேட்க, அப்பெண் "இலங்கோடு கௌபீனம் தரித்த ஒரு சிறிய பரதேசி குழந்தையை கொண்டு வந்து என் கையிற் கொடுத்தார்; வேறு யாதும் தெரியாது" என்றாள்.

ஸ்வாமிகளைத் தரிசிக்கச் சென்றபோது, ஸ்வாமிகள் "வீடு நெருப்பு பற்றிக்கொண்டது; குழந்தை தொட்டிலில் தூங்குகிறதே; ஓடுங்கள்! ஓடுங்கள்!! பயம் வேண்டாம். குழந்தை சுகமாக இருக்கிறது" என்று திருவாய் மலர்ந்ததும், அவ்வண்ணமே எல்லாம் நிகழ்ந்திருப்பதும், இலங்கோடு கௌபீனதாரியாக வந்து குழந்தையை நெருப்பிலிருந்து காப்பாற்றியருளியதும் எல்லாம் ஞான சித்தரான நமது ஸ்வாமிகளின் பேரருட் கருணையேயாகும். ஆகையால், குழந்தையை ஸ்வாமிகளின் முன்னிலையில் கொண்டு போய் வைத்து ஸ்வாமிகள் திருநாமத்தையே குழந்தைக்கும் சூட்ட வேண்டும் என்று உறுதிகொண்டு மறுநாட் காலையில் குழந்தையுடன் ஸ்வாமிகள் இருக்கை சேர்ந்து ஸ்வாமிகளின் சன்னிதியில் குழந்தைக்கு "அருணாசலம்" என நாமகரணம் செய்தனர்.

இஃதறிந்த உறவினர், ஆசாரியர் முதலானோர் தங்கள் சமயத்திற்கு உரியதல்லாத இந்நாமத்தை விட்டு தங்கள் வைணவ சமய சம்பந்தமான பெயரையே சூட்ட வேண்டும் என வற்புறுத்திக் கூறியும், ஆராவமுதய்யங்காரும் அவரது மனையாளும் அதற்கு இயைந்திலர். சுற்றத்தாரும் ஆசாரியர்களும் கூடிய ஓர் விசேட தினத்தில் ஆராவமுதய்யங்கார் தம்பதிகளை அழைத்து "உங்கள் குழந்தைக்கு நமது வைணவ சம்பிரதாயத்திற்குப் புறம்பான நாமகரணம் சூட்டியதை மாற்றாவிடில் உங்கள் இருவரையும் சாதிக்குப் புறம்பு படுத்துவோம்" என்றனர். பெற்றோர்கள்,





ஸ்வாமிகளின் அனுக்கிரகத்தாலேயே தாங்கள் புத்திர பாக்கியம் பெற்றதும், மீண்டும் ஸ்வாமிகளின் அருட் கருணையால் குழந்தை நெருப்பிலிருந்து காப்பாற்றப் பெற்றதும் எடுத்துச் சொல்லி தாங்கள் ஸ்வாமிகளின் முன்னிலையில் சூட்டிய நாமத்தை தாங்களே மாற்றுவது இயலாது. "எனது பெயரை மாற்றி இன்ன பெயரால் அழையுங்கள்" என்று குழந்தையின் மூலம் திருவருள் உத்தரவானால் அப்படியே செய்கிறோம் என்றும் கூறினர். அவ்வண்ணம் சபையோர் முன்பாகக் குழந்தையை கூட்டி வந்தனர். "தம்பி உன் பெயர் என்ன? என்று சபையோர் கேட்க, "என் பெயர் அருணாசலம்" என்றனன் மழலை மாறாத செல்வன். "உனது பெற்றோர் உனக்கு நமது மரபுக்குப் புறம்பான, வசனிக்கத்தகாத நாமத்தைச் சூட்டியுள்ளனர். அதை மாற்றி வேங்கடாச்சலம் என்ற நாமஞ் சூட்ட நாங்கள் விரும்புகிறோம். அதை நீ ஏற்றுக் கொள்வாயாக" என்று சபையோர் உரைத்தனர். உடனே அறியாப் பருவத்தினனாகிய பாலகன் ஆவேசம் அடைந்து எழும்பிக் குதித்துச் சபையில் உள்ளவர்களை உக்கிரமாகப் பார்த்து "அருணாசலம் என்னும் நாமத்தில் உள்ள அகரம், அரி நாமத்தின் முதல் அட்சரமாகும். ரகர உகரம் திரு என்னும் பிராட்டியின் நாமத்தில் உள்ள ஈற்று அட்சரமாகும். ணகர ஆகாரம் நாராயண மூர்த்தியின் அஷ்டாக்ஷரமாகிய மந்திரத்தில் உள்ளதாகும். அசலம் என்பது நீங்கள் சூட்ட விரும்பும் வேங்கடாசலம் என்னும் பெருமான் வீற்றிருக்கும் தானமாகும். இதை மறந்து அருணாசலம் என்னும் திருநாமம் வசனிக்கத்தகாது என்றது அறியாமையேயாகும். இனியேனும் உமது வாயை மூடுங்கள், பேத புத்தியை விடுங்கள். அல்லாவிடிற் கெடுவீர்கள்" என்று சொல்லி மௌனமாக இருந்தான். இந்நிகழ்ச்சி கண்ட சபையோர்கள்

மெய் நடுங்கி பயம் அடைந்து ஒவ்வொருவராக எழுந்து சென்றனர். அது முதல் அவர்களும் தங்கள் வைணவ சம்பிரதாயத்தைப் போற்றியும், பிற சமயத்தில் துவேஷங் காட்டாமலும் ஸ்வாமிகளிடத்து மிக்க அன்பு பாராட்டி வந்தனர்.

ஓர் நாள் ஸ்வாமிகளுடன் பள்ளியில் பயின்று வந்த பிராமணச் சிறுவன் ஒருவனை விடம் தீண்டியதால் மூர்ச்சையானான். மணி மந்திரம் ஆகிய அனேக பரிகாரங்கள் செய்தும் பயன் இல்லை. வெளியூர் சென்றிருந்த அப்பையனின் அன்னை மறுநாள் வீடு வந்து தன் அருமை மைந்தன் பிணமாய்க் கிடப்பதைப் பார்த்து வயிற்றலடித்துக் கொண்டு ஸ்வாமிகளிடத்து ஓடி வந்து "ஐயோ, உன்னுடன் பள்ளியிற் பயின்ற சுந்தரமாகிய ஒரு பிள்ளையையும் பாம்புக்கு இரையாகக் கொடுத்து விட்டு நான் எப்படி உயிர் வாழ்வேன். அவன் பிழைத்து எழாவிடில் நானும் என் உயிரை உன் முன்னிலையில் விட்டு விடுகிறேன்" என்று தரையில் விழுந்து புரண்டு அலறினாள். இப்பரிதாப நிலையைக் கண்ட ஸ்வாமிகள், 'அம்மா! உன் மைந்தனை எழுப்பித் தருகிறேன். கவலை நீங்கி வருவாயாக' என்று அப்பிராமணியின் வீட்டுக்குச் சென்று அங்கிருந்த ஓர் பிரம்பை எடுத்து "அப்பா சுந்தரம் எழுந்திரு" என்று சொல்லி சிறுவன் தலையில் ஓர் அடி அடித்தது. உடனே சுந்தரம் தூங்கி எழுபவன் போல் உயிர்பெற்று எழுந்தனன்.

இங்ஙனம் ஸ்வாமிகள் பல அற்புதத் திரு விளையாடல்கள் செய்துவரும் நாளில், பிதாவாகிய சிவசிதம்பரம் பிள்ளை ஸ்வாமிகள் முன்பாக வணக்கமுடன் நின்று ஸ்வாமின்! "எனது பாரியை மீனாம்பிகை பிரேதமாய்க் கிடக்க யான் பாராதிருக்கும் வரந்தரல் வேண்டும்" என்றும்

“ஸ்வாமிகளின் திருக்கரத்தாலேயே எனக்கு ஈமக்கடன்கள் முடிக்க வேண்டும்” என்றும் பிரார்த்தித்துக் கொண்டனர். இதனை மீனாம்பிகை அம்மையாரும் “சுமங்கலியாகவே தான் சரீரத்தை விட வேண்டும் என்றும், தனக்கும் ஸ்வாமிகளின் திருக்கரத்தாலேயே ஈமக்கடன்கள் செய்ய வேண்டும்” என்றும் கேட்டுக் கொண்டனள். ஒரு நாள் ஸ்வாமிகள் தாய் தந்தையரை அருகில் அழைத்து “ இன்னும் எட்டாவது நாள் காலையில் நமது கருமம் முடிந்துவிடும்; நீங்கள் சிவநாமத்தை உச்சரித்துக் கொண்டு சிவத்தியானம் செய்து வாருங்கள்” என்று அருளிச் செய்தது. இது கேட்ட பெற்றோர் இருவரும் ஸ்வாமிகளின் திருக்குறிப்பை உணராமல் மிக்க வியாகூலத்துடன் ஸ்வாமிகள் இன்னும் எட்டுத் தினங்களில் சமாதி அடைந்துவிடும் போல் இருக்கிறது என்று கருதி உற்றார் உறவினர்களிடம் தெரிவித்து ஸ்வாமிகள் அருளியபடி சிவத் தியானம் செய்து கொண்டிருந்தனர். எதிர்பார்த்த எட்டாவது தினமும் விடிந்தது. இன்று தினம் ஸ்வாமிகள் சமாதி அடைய விரும்புவதாக அறிந்த சுற்றத்தார்களும் உற்றார்களும் வந்து நிறைந்தனர். மாதா, பிதாக்கள் இருவரும் தூய சிந்தனையுடன் ஸ்வாமிகளின் முன்னர் அமர்ந்து சிவநாமத்தை உச்சரித்துக் கொண்டு சமாதி தருணத்தை எதிர் நோக்கியிருக்கும் பொழுது ஸ்வாமிகள் இருக்கைவிட்டு எழுந்து மாதா, பிதா இருவர் நெற்றியிலும் திருநீறிட்டு அனுக்கிரகம் புரிந்தது. சிறிது நேரத்தில் இருவரும் மூர்ச்சையடைந்து கணப்பொழுதில் சிவபதம் அடைந்தனர். கூடியிருந்த சுற்றத்தார்கள் ஸ்வாமிகளின் திருக்குறிப்பின் உண்மையை உணர்ந்து சிவசிதம்பரம் பிள்ளைக்கும், மீனாம்பிகை அம்மைக்கும் செய்ய வேண்டிய இறுதிக் கிரியைகளை முறைப்படி செய்து மயானத்துக்கு எடுத்துச் சென்று

இருவருக்கும் ஒரே தானத்தில் சிதை அடுக்கித் தீ இடுவதற்குத் தயார் செய்தனர். ஸ்வாமிகள் விதிப்படி வந்து ஸ்நானம் செய்து கொள்ளி எடுத்துக் கொண்டு சுற்றி வந்து தலைப்பக்கத்தில் வைத்து விட்டுத் தமது பெற்றோர் கடன் தீர்ந்தது என்று, கட்டிய வஸ்திரத்தோடு திரும்பிப் பாராமல் எவரும் அறியா வண்ணம் புறப்பட்டுத் தேசங்கள் தோறும் சஞ்சரித்துக் கொண்டிருந்தது.

வைத்தீஸ்வரன் கோயிலுக்கு வந்தபோது ஒரு நாள் ஸ்வாமிகளின் உறவினரான கோயில் கணக்கர் ஸ்வாமிகளைக் கண்டு ஸ்வாமிகளின் மகிமை அறியாது, "தம்பி! நான் பத்துத் தினங்கள் மருந்து சாப்பிட வேண்டியிருக்கிறது. அதுவரை நீ இங்கிருந்து கணக்கு எழுதி வருகிறாயா?" என்று வினவ, ஸ்வாமிகள் "சிவ கைங்கர்யந் தானே, செய்கிறேன்" என்றது.

கணக்கு ஓலையையும் எழுத்தாணியையும் ஸ்வாமிகள் கணக்கரிடமிருந்து பெற்றுக்கொண்டு கணக்கு மேடையில் அமர்ந்து, மணியக்காரர் முதலானோர் வந்து விவரம் சொல்வதற்கு முன்னதாகவே எழுத வேண்டியவை அனைத்தையும் எழுதி முடித்துக் கணக்கைக் கட்டி வைத்து விட்டு நிட்டையில் அமர்ந்துவிடும். மணியக்காரர் ஆகியோர் வந்து கணக்கு விவரம் சொல்லும் போது "யாவும் எழுதியாயிற்று; கணக்கைப் பார்த்துக் கொள்ளுங்கள்" என உத்தரவாகும். அவர்கள் கணக்கை எடுத்து பார்க்கும் பொழுது எல்லாம் சரிவர எழுதியிருக்கும். ஒரு நாள் கோவில் திட்டத்தில் நான்கு படி பாலும் ஒரு படி தேனும் கணக்கு எழுதப்படாமல் இருந்ததைக் கண்டு மணியக்காரர் ஸ்வாமிகளிடம் கேட்க, "குருக்கள் பாலையும் தேனையும்

அபிஷேகம் செய்யாமல் வீட்டுக்குக் கொண்டு செல்ல வைத்திருக்கிறார். போய் பாருங்கள்" என்றது. மணியக்காரர் கோவிலுட் சென்று ஸ்வாமிகள் குறித்த இடத்தில் பார்வையிட, பாலும் தேனும் தனியாக எடுத்து வைக்கப்பட்டிருந்தன. இவ்விதமாக ஸ்வாமிகள் எழுதி வந்த கணக்கு காரணமாக, தயிர், பால், அரிசி, எண்ணெய் ஆகியனவும், உண்டியல் பணம், முடிப்பணம் ஆகியனவும் களவு செய்ய இடமில்லாததாயிற்று.

கோயில் சிப்பந்திகளும் ஸ்வாமிகளைக் காணும் போது அச்சத்துடன் எழுந்து நின்று வணக்கம் செய்பவர்களாயினர். தாம் கணக்கு எழுதி வருவது காரணமாக கோவில் சிப்பந்திகள் தம்மிடம் அச்சங் கொண்டு மரியாதைக் காட்டி வருவதை உணர்ந்து ஸ்வாமிகள் அவ்வூரை விட்டு தென் திசை நோக்கிப் புறப்பட்டுப் பல ஊர்களிலும் சஞ்சரித்துக் கொண்டு அதிவீரராமன் பட்டினத்தை அடைந்தது.

அங்கு வேளாளர் மரபினரும், உப்பளம் பேஷ்கார் உத்தியோகம் வகிப்பவருமான சுந்தரம் பிள்ளை என்பவர் தெருவில் செல்லும் ஸ்வாமிகளை அழைத்து, ஸ்வாமிகளின் பெருமை அறியாமல், "உன் மரபு யாது? என்று வினவினர். ஸ்வாமிகள், "கார்காத்த வேளாளர் மரபு" என்றது சுந்தரம் பிள்ளை மகிழ்ச்சியடைந்து, "நமது பூஜைக்கு பணிவிடை செய்து கொண்டிருந்த பையன் ஊருக்குப் போய் விட்டான். நீ நம்மோடு கூட இருந்து நமது பூஜைக்குப் பணிவிடை செய்து வருவாயாகில் உனக்கும் பூஜா கைங்கர்ய பலன் கிடைக்கும்" என்றனர். ஸ்வாமிகளும் அன்பர்களிடத்து பெரும் கருணை உடையார் ஆதலின் சுந்தரம் பிள்ளையின் பூஜா கைங்கர்யத்துக்குச் சம்மதித்து, தினந்தோறும் பூஜைக்கு

வேண்டிய ஏற்பாடுகளைத் தவறாமல் செய்து வைத்துத் தான் ஒருபுறமாக நிட்டையில் இருக்கும். சுந்தரம் பிள்ளை ஸ்நான சந்திகளை முடித்துக் கொண்டு பூஜை செய்யும் போது அவருடைய குமாரத்தியான காந்திமதி என்னும் கன்னிகை இன்னிசையுடன் இணைந்து தேவாரம் திருவாசகம் முதலியன ஓதுவாள். ஸ்வாமிகள் சிலபோது அசைவின்றி நிட்டையில் இருக்கும், சிலசமயம் பிரக்ஞை வரும் போது காந்திமதியின் கானங்களை கேட்டு கண்களில் நீர் பெருக ஆனந்த பரவசமாகி இருக்கும். பூஜை முடிந்தவுடன் சுந்தரம் பிள்ளை ஸ்வாமிகளை அழைத்து உடன் வைத்துக்கொண்டு போஜனம் செய்வார். போஜனம் ஆனதும் ஸ்வாமிகள் ஊருக்குப் புறமாக உள்ள ஓர் குளக்கரையில் தாழை விருட்ச நிழலில் நிட்டையில் அமர்த்திருக்கும். சில சமயம் ஸ்வாமிகளைச் சுற்றிலும் பாம்புகள் படம் விரித்து ஆடித் திரியும்.

ஒருநாள் பூஜைக்கு வேண்டிய அனைத்தும் தயார் செய்து வைத்து ஸ்வாமிகள் வழக்கம்போல் நிட்டை கூடிய சமயம், அனுபூதியில் அழுந்தி விருத்தி வெளிப்படாது எட்டு நாட்கள் வரையில் அசையாத தீபம் போல் திருமேனி அசைவின்றி இருந்தது. சுந்தரம் பிள்ளை முதலியவர்கள் ஸ்வாமிகளைத் தட்டி எழுப்பியும் சத்தமிட்டும் ஸ்வாமிகளின் விருத்தியை வெளிப்படுத்த முயன்று பயனில்லாமல். ஒன்பதாம் நாளில் தாமாக நிட்டை கலைந்து ஸ்வாமிகள் கண் திறந்தது.

சுந்தரம் பிள்ளை முதலானவர்கள் ஸ்வாமிகளின் பெருமை உணர்ந்து பாதம் பணிந்து "ஸ்வாமி! நாங்கள் அறிவின்மையால் ஸ்வாமிகளை மற்ற சிறுவர்கள் போல்

மதித்து ஏவல் செய்யச் செய்த எங்கள் தவறை மன்னித்துக் கருணை புரிய வேண்டும்; இது முதல் ஸ்வாமிகளுக்கு நாங்கள் தொண்டு செய்து வருகின்றோம்; ஏற்றுக் கொண்டு எங்களை ரட்சிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டனர்.

ஒருநாள் இரவு பருவமங்கையாகிய காந்திமதி காம வேட்கை மிகுந்தவளாய் படுக்கையை விட்டு எழுந்து. வெளியில் திண்ணையில் சயனித்துக் கொண்டிருந்த ஸ்வாமிகள் பால் அணுகி கட்டி அணைத்து ஆலிங்கனம் செய்தனள். ஸ்வாமிகள் நித்திரை கலைந்து நிகழ்ந்ததை உணர்ந்து கன்னியின் கரத்தை தள்ளி விட்டுத் திண்ணையை விட்டு இறங்கி "கண் குருடாகி விட்டதோ" என்று சொல்லி அவ்வூரை விட்டு வெளியேறி விட்டது.

காம வேட்கை தணியப் பெறாமல் கருத்து அழிந்த காந்திமதி வீட்டினுள் சென்று தூக்கம் இன்றி இரவைக் கழித்து காலையில் எழுந்தபோது, கண்கள் இரண்டும் பார்வை இழந்து தனங்களும் மறைந்திருக்கக் கண்டனள். செய்வது அறியாது திடுக்குற்ற மங்கை இந்நிகழ்ச்சியைத் தாயிடம் உரைத்தனள். பெண்ணின் முறையற்ற செய்கையால் பெருங் கவலையடைந்தாள் அன்னை. ஆயினும் உடனே இதனை சுந்தரம் பிள்ளைக்குத் தெரிவிக்க வகை அறியாமற் திகைத்தனள்.

சுந்தரம் பிள்ளை வழக்கம் போல் பூஜை செய்யத் தொடங்கியதும் தினமும் தவறாமல் திருமுறை ஓதும் கன்னி காந்திமதியை காணாமல் அருகில் நின்ற அவர் மனைவியாரை விசாரித்தனர். உண்மையை உரைக்க இது உற்ற தருணமல்ல என்று கருதிய சுந்தரம் பிள்ளையின் மனைவி "காந்திமதிக்கு உடம்பு சௌகரியமில்லாது

படுத்திருக்கிறாள்" என்று விடை தந்தனள். சுந்தரம் பிள்ளை பூஜை முடித்து போஜனம் செய்வதற்காக ஸ்வாமிகளைப் பார்த்தபோது "ஸ்வாமிகள் ஒன்றும் சொல்லாமல் இரவில் புறப்பட்டு எங்கோ சென்றுவிட்டது" என மனைவியார் உரைத்தனர். சுந்தரம் பிள்ளை மிகவும் வருத்தமுற்று போஜனம் ஆனதும் ஸ்வாமிகளைத் தேடிச் சென்று அழைத்து வர உறுதி கொண்டு போஜனம் முடித்து தாம்பூலம் தரிக்கும் வேளையில், உரிய தருணத்தை எதிர் பார்த்திருந்த உத்தமியாகிய சுந்தரம் பிள்ளையின் மனைவி அவர் அருகில் வந்து பெண்ணுக்கு நேர்ந்த பெருங்கேட்டை ஒழியாது உணர்த்தினாள். சுந்தரம் பிள்ளை மனம் வருந்தி ஞானிகளால் வந்த சாபம் அவர்கள் கருணையால் நீங்கும் அல்லாது ஈஸ்வரனாலும் ஆகாது; ஆகையால் எப்படியாவது ஸ்வாமிகளை அடைந்து ஸ்வாமிகளின் கருணையைப் பெற வேண்டும் என்று நிச்சயித்து மனைவியையும், மகளையும் உடன் அழைத்துக் கொண்டு ஸ்வாமிகள் சென்ற திசையை ஆங்காங்கு விசாரித்து அவர்கள் காட்டிய வழியில் சென்று பட்டுக்கோட்டை என்னும் பதியைச் சேர்ந்தனர்.

ஆங்கு மரத்தடியில் நிட்டையில் அமர்ந்திருந்த மஹான் ஒருவரைக் கண்டு வணங்கி "எங்கள் மனக்குறை நீங்குமா" என்று சுந்தரம் பிள்ளை கேட்க, அம்மஹான் "நீங்கள் தேடிச் செல்லும் குருநாதனை நாளை மாலையிற் காண்பீர்கள்; உங்கள் மனக்குறையையும் நீங்கும்" என அருளினர்.

மறுநாட் காலையில் சுந்தரம் பிள்ளை முதலியோர் பட்டுக்கோட்டையினின்றும் பிரயாணமாகி மாலையில் ஆவுடையார்கோவில் அருகில் உள்ள ஒரு காட்டாற்றைக்

கடந்து வரும் பொழுது ஆங்குள்ள ஒரு சிறிய குளக்கரையில் விருட்சத்தின் நிழலில் ஸ்வாமிகள் அமர்ந்திருக்கக் கண்டு அளவிலா ஆனந்தம் கொண்டு ஸ்வாமிகளின் பாதங்களில் நமஸ்கரித்து, ஸ்வாமி! பேதைப் பெண் காந்திமதி செய்த பெரும்பிழையை மன்னித்து அருள் புரிய வேண்டும். அல்லாவிடின் நாங்கள் உயிருடன் வாழ்வதற்கில்லை. அருள் வள்ளலாகிய ஸ்வாமிகள் எங்கள் குறையை நீக்கிச் சிறுமி காந்திமதிக்கு நல்வாழ்வு நல்க வேண்டும்" எனப் பிரார்த்தித்து நின்றனர். கருணைக் கடலாகிய ஸ்வாமிகள் கிருபையுடன் காந்திமதியின் முகத்தில் ஜலம் தெளித்து விட்டு எழுந்து ஊருக்குள் சென்றது. அக்கணமே காந்திமதிக்கு முன்போல் கண் பார்வையும் தனங்களும் தோன்றலாயின.

சுந்தரம் பிள்ளையும் அவர் தம் மனையாளும் புதல்வி காந்திமதியுடன் ஸ்வாமிகளை விடாமல் பின் தொடர்ந்து சென்றனர். ஸ்வாமிகள் ஆலயத்துட் சென்று அங்குள்ள விநாயகர் சன்னிதியில் நிட்டை கூடியிருந்தது. நிட்டை கலைந்ததும் ஸ்வாமிகளுக்கு திருவமுது செய்விக்க விருப்பங் கொண்டு சுந்தரம் பிள்ளை முதலியோர் ஆங்குள்ள தீர்த்தத்தில் மூழ்கி, அருகில் உள்ள தம்பிரான் ஸ்வாமிகள் மடாலயம் சென்று மிகவும் ஆசாரத்துடன் அமுது தயார் செய்து எடுத்துக் கொண்டு ஸ்வாமிகள் நிட்டை கூடியிருக்கும் இடம் நோக்கிப் புறப்படும் வேளையில், வெளியிற் சென்று திரும்பி வந்த கட்டளைத் தம்பிரான் இதனை அறிந்து, "மடத்தின் அபிமானிகளான நீங்கள் மடத்திலேயே போஜனம் செய்வதை விட்டுத் தனியாக சமையல் செய்வதற்கும் அவற்றை வெளியில் கொண்டு செல்வதற்கும் காரணம் என்ன? என்று வினவ, முன் நடந்த

விருத்தாந்தங்கள் அனைத்தையும் ஒழியாது உரைத்தனர். தம்பிரான் ஆச்சரியமடைந்து இரவு தமது கனவில் ஒரு பிராமணர் தோன்றி "நாளைய தினம் இங்கு ஒரு முனிவன் வருகிறான்; அவனைத்தரிசித்தால் உனது குன்மநோய் நீங்கிவிடும். "எமது பெயர் ஆத்மநாத சாஸ்திரி" என்று சொல்லி மறைந்ததையும் அது வெறும் கனவு என்று கருதி உபேட்சையாக இருந்ததையும் சொல்லி, "நீங்கள் சொல்லும் ஸ்வாமிகள் தான் சொப்பனத்தில் அருளப் பெற்ற முனிவராக இருத்தல் வேண்டும். பிராமணராக வந்தவர் அருட்கடலான ஆத்மநாதரே. ஆகையால் ஸ்வாமிகளைத் தரிசிக்க யானும் உடன் வருகிறேன்" என்று சொல்லி ஸ்நானம் அநுட்டானம் ஆகியவற்றை முடித்துக் கொண்டு பழ வகைகளுடன் தாமும் கூடச் சென்று ஸ்வாமிகளைக் கண்டு பேரானந்தங் கொண்டு பாதம் பணிந்து வணங்கி ஒரு புறமாக ஒதுங்கி நின்றனர். சிறிது நேரத்தில் ஸ்வாமிகள் நிட்டையிலிருந்து எழுந்ததும் சுந்தரம் பிள்ளை ஸ்வாமிகள் முன் வந்து தங்கள் பிக்ஷையை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று பிரார்த்திக்க ஸ்வாமிகள் இசைந்தது.

சுந்தரம் பிள்ளை முதலியோர் பெரு மகிழ்ச்சியடைந்து ஜலம் எடுத்து வந்து ஸ்வாமிகளின் திருவடிகளை விலக்கி உலர்ந்த வஸ்திரம் கொண்டு நீர் ஒற்றித் தக்க ஆதனம் இட்டு அதில் ஸ்வாமிகளை எழுந்தருளச் செய்தனர். சுந்தரம் பிள்ளையின் மனைவியர் பணிவுடன் சுத்தம் செய்த இலையில் திருவமுது படைத்தனர். தம்பிரான் அவர்களின் கட்டளைப்படி பிராமணர் ஒருவர் கொண்டு வந்த சர்க்கரைப் பொங்கலைத் தம்பிரான் அவர்கள் தம் கையால் இலையில் படைத்து, "எம்பவப் பிணி தீர எழுந்தருளிய குருநாதரே! அடியேனை நெடு நாளாக துன்புறுத்தி வரும் உடற்பிணியை

அகற்றியருள வேண்டும்" என விண்ணப்பித்துக் கொண்டனர். ஸ்வாமிகள் தமக்குப் படைக்கப் பெற்ற சர்க்கரைப் பொங்கலில் சிறிது எடுத்து "இதை உட்கொள்வாயாகில் உனது நோய் தீரும்" என்று தம்பிரானிடம் அளித்து அநுக்கிரகித்தது. நெடு நாட்களாக துன்புறுத்தி வந்த கொடிய நோய் அக்கணமே நீங்கியது. ஸ்வாமிகள் பிக்ஷை செய்து எழுந்ததும் மீதமுள்ள பரிகலச் சேடத்தை எல்லோரும் திருவருட் பிரசாதமாகக் கருதி உட்கொண்டனர்.

பின்னர் தம்பிரான், ஸ்வாமிகள் முன்னர் வணக்கம் செய்து நின்று, "ஸ்வாமிகளின் கிருபையால் எனக்கு அளித்த பிரசாதத்தை உட்கொண்ட அளவில் தீராத குன்ம நோய் தீர்ந்து விட்டது தங்கள் பாத பத்மங்களைத் தரிசிக்கவும், பரிகல சேடத்தை உட்கொள்ளவும் பாக்கியம் பெற்ற அடியேனுக்குப் பாவப் பிணியும் நீங்குவதில் சந்தேகமில்லை. என் ஆண்டவனே! என்று பலவாறு தோத்தரித்து, கருணைக் கடலாகிய ஸ்வாமிகளைப் பிரிந்து வாழ்வது எவ்வாறு இயலும்? தாங்கள் இவ்விடமே இருந்து அநுக்கிரகம் புரிந்து வரவேண்டும்" என்று பிரார்த்தித்தனர். சுந்தரம் பிள்ளை முதலியவர்களும் எமது குல தெய்வமாகிய ஸ்வாமிகள் எங்களுடன் அதிவீரராமன் பட்டிணத்திலேயே எழுந்தருளியிருந்து எங்களை ரட்சிக்க வேண்டும்" எனப் பல முறையும் பணிந்து கேட்டுக் கொண்டனர். ஸ்வாமிகள் "இவன் இங்கும் இரான், அங்கும் வரான்" எனப்பதில் தந்தது.

மறுநாள் விடியுமுன் புறப்பட்டு ஸ்வாமிகள் பல ஊர்களிலும் காடுகளிலும் சஞ்சரித்துக் கொண்டு தொண்டமான் புதுக்கோட்டையை அடுத்து திருக்கோகர்ணம் என்னும் ஊருக்கு அருகில் வந்து

கொண்டிருந்தது. அவ்விடத்து உள்ள ஓர் குளக்கரையில் தான் செய்த பாப கிருத்தியங்களின் பயனாக உதிரமாடன், இரத்த சாமுண்டி, பிரம்ம ராட்சஸன் முதலிய துட்ட தேவதைகளால் பீடிக்கப்பட்டு அறிவு மயங்கிய ஒரு பேயன் வழியில் செல்லுவோரை வைதல் மேல் விழுந்து கடித்தல், கல்லால் அடித்தல், மல சலங்களை எடுத்து வீசுதல் போன்ற பலவாறான துர்க்கிருத்தியங்களால் துன்புறுத்திக் கொண்டு இருந்தான். அவன் இருக்கும் மார்க்கத்தில் ஸ்வாமிகள் செல்வதைக் கண்டவர்கள் "ஐயா! நீங்கள் செல்லும் மார்க்கத்தில் உள்ள குளக்கரையில் ஒரு பேயன் இருக்கிறான். வழியில் செல்பவர்களை அவன் மிகவும் ஹிம்சை செய்கிறான். நீங்கள் வேறு வழியாகச் செல்லுங்கள்" என்று வற்புறுத்தினர். ஸ்வாமிகள் அவர்கள் வார்த்தையை பொருட்படுத்தாமல் அவ்வழியிலேயே சென்று கொண்டிருந்தது. குளக்கரையை நெருங்கிய போது முன் கூறப்பட்ட பேயன் கல் முதலிய கைக்குக்கிடைத்த பொருள்களை எடுத்துக் கொண்டு ஸ்வாமிகளை அடிக்க ஓடி வந்தான். அவன் வருவதை அறிந்த ஸ்வாமிகள் அப்பேயனை நோக்கிப் புன்னகை புரிந்தது. ஸ்வாமிகளின் மந்தகாசத்தின் மகத்துவத்தால் பேயன் மருள் நீங்கப் பெற்றவனாய் கல் முதலியவற்றைத் தூர எறிந்து விட்டு ஸ்வாமிகளின் திருவடிகளில் வணக்கம் செய்து, "சுமார் இருபது வருடங்களாக வருண ஆச்ரம தர்மங்களை விடுத்து என்னை மகா பாப கருமங்களையே செய்து வரும்படி ஆக்கிய துட்ட தேவதைகள் தேவரீர் கிருபா கடாட்சத் தினாலும் தரிசனத்தினாலும் புன்னகையாலும் விட்டு விலகின. ஆயினும் நீண்ட நாட்கள் சாதிப் பிரஷ்டனாகி என்னால் செய்யப் பெற்ற பாப கருமங்கள் என்னை நரகத்தில் ஆழ்த்தி விடுமே! அல்லாமலும் இனி மேல்

எனக்குப் பிராம்மணத்துவம் தான் உண்டோ? என்று மிக மிக வருந்தி, பயபக்தியுடன் வணங்கி கேட்க, ஸ்வாமிகள், "உனது செயல் மறந்து துர்த்தேவதைகளின் வசப்பட்டு நீ பாப கருமங்கள் செய்தனையாதலின் நரக துன்பங்கள் உன்னைப் பற்றா. சுய அறிவு பெற்று பூர்வ நிலை அடைந்தனையாதலின் உனக்குப் பிராமணத்துவம் கூடும். அஞ்சாதே" என்று திருவாய் மலர்ந்தது.

இங்ஙனம் ஸ்வாமிகள் பல இடங்களிலும் சஞ்சரித்துக் கொண்டு ஒருநாள் நடு இரவில் விராலிமலை என்னும் ஊரைச் சேர்ந்தபோது பெருமழை பெய்து கொண்டிருந்த படியால் அங்குள்ள ஒரு தாசியின் வீட்டுத் திண்ணையில் ஒதுங்கியிருந்தது. ஸ்வாமிகள் பசியோடு இருந்ததை உணர்ந்த விராலிமலை முருகப்பிரான் பிராமணச் சிறுவன் வடிவந்தாங்கி தமக்கு அன்று அர்த்தயாம காலத்தில் நிவேதிக்கப் பெற்ற சர்க்கரைப் பொங்கலைத் தாம்பாளத் துடன் கொண்டு வந்து "அப்பா! இவ் அன்னத்தைப் புசிப்பாயாக!" என்று கொடுத்து மறைந்தனர். ஸ்வாமிகள் அதில் சிறிதை மட்டும் உட்கொண்டு பாக்கியை அத்தாம்பாளத்துடன் ஒரு புறமாகத் தள்ளிவிட்டு நிட்டையில் அமர்ந்தது. அன்று தினம் அங்கு முகாம் செய்திருந்த புதுக்கோட்டை தாசில்தாருக்கு அர்த்தயாம நைவேத்தியம் கொண்டு செல்வதற்காக மழைவிட்டதும் குருக்கள் நைவேத்தியம் வைத்த இடத்தில் வந்து பார்க்க தாம்பாளத்துடன் நைவேத்தியம் காணப்படவில்லை. மணியக்காரரிடம் தகவல் தெரிவித்து விசாரித்துப் பார்க்க வேற்று மனிதர் யாரும் கோவிலுக்குள் வரவில்லை என்று தெரிந்தது. ஒரு கால் "சுயம்பாகிப் பிராமணர் எடுத்துச் சென்று தாசி வீட்டில் கொடுத்திருக்கக் கூடும்" என்று

சந்தேகித்து கோவில் அதிகாரிகள் காவல்காரர்களைக் கூட அழைத்துக் கொண்டு அவ்வூர் தாசி வீட்டுக்குச் சென்று பார்க்க அவ்வீடு பூட்டப் பெற்றிருப்பதும் பிரசாதத்துடன் தாம்பாளம் திண்ணையில் இருப்பதும் அருகில் ஸ்வாமிகள் அமர்ந்திருப்பதும் கண்டனர்.

ஸ்வாமிகளின் அருள் திறம் அறியாமல் "எவனோ பிச்சைக்காரன், இவன் தான் திருடியிருக்க வேண்டும்" என்று கருதி " யாரடா நீ? இந்தத் தாம்பாளம் இங்கு எப்படி வந்தது? உண்மையைச் சொல்" என்று கேட்டனர். "ஒரு பிராமணப் பிள்ளை இதைக் கொண்டு வந்து கொடுத்துப் போயிற்று. நமக்கு வேண்டியதை உட்கொண்டு எஞ்சியதை வைத்து விட்டோம்" என்று ஸ்வாமிகள் பகர்ந்தது. எதிர்த் திண்ணையில் படுத்திருந்த ஒருவர் எழுந்து வந்து "இவர் சொல்வது முற்றும் உண்மையே. ஒரு பிராமணப் பிள்ளை இத்தாம்பாளத்தைக் கொண்டு வந்து கொடுத்து "அப்பா! இதனைப் புசிப்பாயாக" என்று சொன்னதையும் கேட்டேன். "இவர் திருடர்அல்லர்" என்றார்.

ஸ்வாமிகளின் அருட் பொலிவுடன் திகழும் திருமுகத்தையும் அநுபூதி நிலையையும் கண்ட கோவில் அதிகாரிகள் ஸ்வாமிகள் பால் ஏற்பட்ட சந்தேகம் நீங்கப் பெற்று, எஞ்சியுள்ள பிரசாதத்தை எடுத்துக் கொண்டு தாசில்தாரின் ஜாகையை அடைந்தனர்.

இவர்கள் வரும் முன்னதாகவே தாசில்தார் போஜனம் முடித்து நித்திரைக்குப் போய்விட்டார். கனவில் முருகப் பெருமான் ஓர் பரதேசி வடிவில் வந்து "அப்பா! குருக்கள் உனக்குக் கொடுப்பதற்காக வைத்திருந்த அர்த்தயாமப்

பிரசாதத்தை இன்றுதினம் இவ்வூருக்குவந்த தாசிவீட்டுத் திண்ணையில் பசியோடு அமர்ந்திருந்த ஞானி ஒருவனுக்குக் கொடுத்து விட்டோம். விரைவில் சென்று அவன் புசித்து மீதமுள்ள உச்சிட்டத்தை எடுத்து நீ புசிப்பாயானால் உன்னுடைய சிர நோயும் காச நோயும் நீங்கும்" என்று அருளி மறைந்தனர். தாசில்தார் உடனே விழித்து எழுந்து கனவில் தோன்றியவர் விராலிமலை முருகப்பெருமானே என்று துணிந்து, அவர் அருளிய வண்ணம் தாசி வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருக்கும் ஞானவள்ளலை தரிசிக்கப் புறப்படும் சமயத்தில், கோவில் அதிகாரிகள் வந்து பிரசாதம் கொண்டுவர நேரமானதன் காரணத்தைக் கூறினர். தம் கனவு மேலும் நனவாகி வருவதைக் கண்ட தாசில்தார் பெரு மகிழ்ச்சி அடைந்து, தாம்பாளத்துடன் பிரசாதத்தையும் எடுத்துக்கொண்டு ஸ்வாமிகள் பால் அணுகி வணக்கமுடன் நமஸ்கரித்து நின்றனர். ஸ்வாமிகள் தாசில்தாரை நோக்கி, "இவ் அமுதை நீ புசிப்பாயாக!" என்றது. தாசில்தார் மீண்டும் ஸ்வாமிகளை வணங்கி முருகப் பெருமானின் திருவருளைத் தியானித்து ஸ்வாமிகளின் உச்சிட்டமான பிராசாதத்தை உட்கொண்டனர். அதுமுதல் தாசில்தாரைப் பற்றியிருந்த காச நோயும் ஒருத்தலை நோயும் அறவே நீங்கியது.

தாசில்தார் ஸ்வாமிகளின் கருணைத் திறத்தை வியந்து போற்றி, "ஸ்வாமிகளுக்கு அடியேன் தொண்டு புரிந்து வரத் திருவுள்ளம் இரங்கவேண்டும்" என்று பிரார்த்திக்க, "முருகனுக்குத் தொண்டு செய்" எனக் கட்டளையிட்டுப் பின்னும் சில நாள் தங்கியிருந்து அவ்விடம் விட்டுப் புறப்பட்டது.

பல ஊர்களிலும் சஞ்சரித்துக் கொண்டு, பற்பல திருவிளையாடல்களும் நடாத்தி இராஜமன்னார்குடியை அடைந்த காலத்தில், அங்கு பிரசித்தி பெற்று விளங்கும் இராஜகோபால ஸ்வாமி சந்நிதியில் சென்று நிட்டை கூடியிருந்தது. கோவில் அர்ச்சகர் ஸ்வாமிகளைப் பார்த்து "யாரடா சூத்திரன்! கோபாலன் சந்நிதியில் வந்து குந்தியிருக்கிறாய், எழுந்து வெளியிற் போய்விடு" என்று சத்தமிட, ஸ்வாமிகள் நிட்டை கலைந்து அர்ச்சகரை நோக்கி "நீ தீட்டுடையவன்; கோபாலன் திருமேனியைத் தீண்ட அருகனல்லன்", என்று உரைத்து கோவிலை விட்டு வெளியிற் சென்றது.

ஸ்வாமிகள் வெளியிற் சென்றதும் குருக்களைத் தேடிக்கொண்டு கோவிலுக்குள் ஓர் ஆள் ஓடிவந்து, குருக்கள் மனைவி குளிக்கப்போன இடத்தில் குளத்தில் விழுந்து இறந்து விட்டனள்" உன்று உரைத்தான். குருக்கள் மனம் பதைத்து வீட்டுக்கு விரைந்தனர். இந் நிகழ்ச்சிகளைக் கவனித்து கொண்டிருந்த சிலர் ஸ்வாமிகளின் அற்புதச் செயலைக் கண்டு ஆச்சரியமடைந்து வெளியில் வந்து ஸ்வாமிகளைத் தேடிபார்த்தும் காண இயலாமல் திரும்பினர்.

நீடாமங்கலத்தில் ஆற்றங்கரைப் படுகையில் ஒரு நாள் ஸ்வாமிகள் நிட்டையில் அமர்ந்திருந்தபோது ஆற்றங் கரைக்குச் சென்ற பதினான்கு வயதுடைய வடுகச் சிறுவன் ஒருவனைப் பெரிய சர்ப்பம் ஒன்று படம் எடுத்துச் சீறிக்கொண்டு துரத்த, சிறுவன் பயந்து அலறிக் கொண்டு ஸ்வாமிகள் முன்னர் ஓடிவந்து விழுந்தனன். ஸ்வாமிகள் கண் திறந்து பார்த்து சீறிவரும் சர்ப்பத்தை நோக்கி கை அமர்த்தி, "நல்ல பிள்ளையை தீண்டாதே" என்றது. சர்ப்பம் படத்தைச் சுருக்கிக் கொண்டு வந்த வழியே திரும்பிவிட்டது.

சிறுவன் எழுந்து "வீட்டுக்குச் செல்ல பயமாயிருக்கிறதே! என்ன செய்வேன்?" என்று அழுதனன். கருணாமூர்த்தியாகிய ஸ்வாமிகள் "மனம் இரங்கி அங்கிருந்த ஓர் மரத்தை நோக்கி இச்சிறுவனைக் கூட்டிபோய் வீட்டில் சேர்த்து வருக!" என்று ஆக்ஞாபித்துக் கண்களை மூடி நிட்டையில் அமர்ந்தது. அம் மரத்தில் வாசம் செய்து வந்த ஜடா முனியானது சிறுவனின் தந்தை வடிவங்கொண்டு சிறுவனை அழைத்துக் கொண்டு வீட்டிற்கு அருகில் வந்ததும் "நீ வீட்டிற்குள் சென்று இரு. நான் பெருமாள் சேவை செய்து வருகிறேன்" என்று சிறுவனை வீட்டிற்குள் அனுப்பிவிட்டு மறைந்தது. சிறுவன் வீட்டிற்குள் சென்று தன் மாதாவிடத்தில் ஆற்றங்கரையில் நடந்தவை அனைத்தும் சொல்லி பின்னர், "நாயினா வந்து என்னைக் கூட்டி வந்தார்" என்றனன். "உன்னை அழைத்து வந்த நாயினா எங்கே" என்று தாயார் கேட்க, அவர் என்னை வீட்டிற்குள் அனுப்பிவிட்டு பெருமாள் சேவைக்குப் போயிருக்கிறார்! வருவார்" என்று சிறுவன் சொல்லிக் கொண்டிருந்த சமயம், மன்னார்குடி போயிருந்த பிதாவும் வந்து சேர்ந்தார்.

"பையன் ஆற்றங்கரைக்குச் சென்றிருந்ததை எப்படி தெரிந்து அழைத்து வந்தீர்கள்?"என்று மனைவியார் கேட்க, "நான் இப்போதுதான் மன்னார்குடியிலிருந்து வருகிறேன். குழந்தை ஆற்றங்கரை சென்றதை அறிந்ததும் இல்லை. அவனை நான் அழைத்து வரவும் இல்லையே!" என்றார் பிதா.

"ஏன் நாயினா! நான் ஆற்றங்கரையில் அழுத கொண்டிருந்த பொழுது வந்து என்னை அழைத்து வந்து

வீட்டுக்குப் பக்கத்தில் விட்டுவிட்டுப் பெருமாள் சேவை செய்து வருகிறேன் என்று சொல்லிப் போகவில்லையா?" என்றான் சிறுவன்.

"ஆற்றங்கரையில் என்ன நடந்தது? விவரமாகச் சொல்" என்று தாய் தந்தையர் விசாரிக்க, சிறுவன் ஒன்றும் விடாமல் உரைத்தனன்.

தங்கள் மைந்தனை விடம் தீண்டாமல் காப்பாற்றி வீட்டில் கொண்டு வந்து சேர்த்த பெரியாரைப் காண விரும்பி மைந்தனையும் அழைத்துக்கொண்டு அவன் வழிகாட்ட எல்லோரும் ஸ்வாமிகள் இருக்கும் இடத்துக்கு வந்தனர். வழியில் இவ் அற்புத நிகழ்ச்சியைக் கேள்வியுற்ற பலரும் சேர்ந்து வந்து கூடினர். ஸ்வாமிகள் நிட்டையில் இருப்பதையும் வெகுநேரம் ஆகியும் நிட்டை கலையாமல் இருப்பதையும் கண்டு எல்லோரும் நமஸ்கரித்து எழுந்து "குல தெய்வம் போல் வந்து குழந்தையை பாம்பின் வாயிலிருந்து காப்பாற்றி, குழந்தையுடன் துணை செல்லுமாறு வனதேவதைக்கும் கட்டளையிட்ட வரப்பிரசாத மூர்த்தியே! தங்கள் பேராற்றலைச் சிற்றறிவினராகிய நாங்கள் எவ்வாறு மதித்தல் கூடும்? தங்கள் திருவாக்கின் படியே சிறுவனுக்கு 'நல்லய்யன்' என நாமஞ் சூட்டுகின்றோம். இன்று நேரம் ஆகிவிட்டபடியால் வீடு சென்று நாளைக் காலை வந்து தரிசிக்கின்றோம். அப்பொழுதேனும் கண் திறந்து பார்த்து எங்களைக் கடாட்சிக்க வேண்டும்" என்று பலவாறு பிரார்த்தித்து வீடு திரும்பினர்.

மறுநாள் எல்லோரும் ஸ்வாமிகள் இருந்த இடம் சென்று பார்க்க, ஸ்வாமிகளைக் காணாமல் தங்கள் துர்ப் பாக்கியத்தை நினைத்துத் துக்கித்தனர்.

ஸ்வாமிகள் பல இடங்களிலும் சஞ்சரித்துக் கொண்டு பழங்களத்தூர் என்னும் சிற்றூரை அடைந்து ஆற்றங் கரையில் நடந்து கொண்டிருந்தது. ஆங்கு உடையார் மரபினராகிய ஒருவர் எதேச்சையாக ஸ்வாமிகளைச் சந்தித்து, யாரோ மஹான் போல் தோன்றுகின்றதென்று கருதி, "ஸ்வாமி! என் மனைவி கர்ப்பவதியாகி நான்கு தினங்களாகப் பிரசவிக்க முடியாமல் மரண வேதனைப் படுகிறாள். தாயும் வயிற்றில் உள்ள சிசுவும் பிழைக்க மாட்டார்கள் என்று தோன்றுகிறது. அவள் இறந்தால் யானும் உயிர் தரிக்க மாட்டேன். ஸ்வாமிகள் கருணை கூர்ந்து, சுகப் பிரசவமாகித் தாயும் சேயும் பிழைத்திருக்கும்படி அனுக்கிரகம் செய்ய வேண்டும்" என்று ஸ்வாமிகளின் திருவடிகளில் நமஸ்கரித்து விம்மி அழுதனர். அன்பர் துன்பம் தாங்காத அருட் கடாட்சம் பொருந்திய ஸ்வாமிகள் மனம் இறங்கி, "அப்பா! நீ வீடு சேருவதற்கு முன்னரே ஆண் குழந்தை பிறந்து தாயும் சேயும் சுகமேயிருப்பர். உயிர் சேதம் வராது. வருந்தாதே" என்று கூறி அருளியது. ஆதரவு நிறைந்த அருள்வாக்குப் பெற்ற உடையார் மன மகிழ்வுடன் தமது இல்லம் சேர்ந்த போது, ஸ்வாமிகள் அருளியபடியே ஆண் மகவு பிறந்து தாயும் சேயும் சுகமாயிருக்கக் கண்டார். உடையார் பேரானந்தம் அடைந்து, ஆற்றங்கரையில் கண்ட மஹானின் அனுக்கிரகத்தைப் பற்றி எல்லோரும் அறிவித்துத் தூய கனி வர்க்கங்களும் பசும்பாலும் எடுத்துக் கொண்டு உற்றார் உறவினர் ஆகியோருடன் ஸ்வாமிகளை தரிசிக்க வந்தனர். ஸ்வாமிகள் ஆற்றங்கரையில் உள்ள ஒரு மரத்தின் கீழ் அமர்ந்து நிட்டை கூடியிருந்தமையால், நிட்டை கலையும் வரை காத்திருந்து பின்னர் நிட்டையிலிருந்து எழுந்ததும் பால், பழம் ஆகியவைகளை ஸ்வாமிகள் திருமுன்னர் சமர்ப்பித்து வணங்கி நின்றனர். ஸ்வாமிகள்

அவற்றில் சிறிது மட்டும் உட்கொண்டு மீண்டும் நிட்டையில் அமர்ந்தது.

அன்று இரவே அவ்விடம் விட்டுப் புறப்பட்ட ஸ்வாமிகள் கிராமங்களிலும், வனாந்தரங்களிலும், நதிதீரங்களிலும் சஞ்சாரம் செய்து கொண்டு ஒரு நாள் தமது சகோதரராகிய நமசிவாய ஸ்வாமிகள் வசிக்கும் நீலப்பாடியைச் சேர்ந்தது.

நீலப்பாடியில் நமசிவாய ஸ்வாமிகள் அங்கு உள்ள பெரியார் ஒருவரிடம் 'சிவஞான போதம்' பாடம் கேட்டு வந்தனர். ஒரு தினம் வழக்கம் போல் பாடம் நடந்து வரும் இடத்தில் ஸ்வாமிகளை கண்ட பெரியார் "இவன் சைவ சமயத் தீக்கையில்லாதவனும் சிவபூசை அனுட்டானம் ஆகிய ஆசார நியமங்கள் இல்லாதவனுமாகக் காணப் படுகிற படியால், இவனுக்கு முன்பாக சாத்திர பாடம் சொல்லப்படாது" என்று கருதி அன்று தினம் பாடம் நடத்தாமல் இருந்தனர். பெரியவருடைய உள்ளக் கிடக்கையை உணர்ந்த ஸ்வாமிகள் நமசிவாய ஸ்வாமிகளை அழைத்து, ஐந்தோலையும் எழுத்தாணியும் கொண்டு வரும்படி செய்து ஓலைகளை வாரி ஏடாகச் சேர்த்து அதன்மேல் 'சிவஞான போதச் சிந்தனம்' என்று எழுதியதுடன் அச்சுவடியில் சிவஞான போதத்தைச் சிந்திக்கும் முறையைப் தெளிவாக எழுதிக் கொடுத்து "இதனை சிரத்தையுடன் சிந்தனம் செய்து வருவையேல் 'சிவ ஞான போத'த்தை முறைப்படி சிரவணம் செய்தலினால் வரும் பயனை எளிதில் அடையலாம்" எனக் கட்டளை யிட்டது. அக்கட்டளையைச் சிரமேற் கொண்ட நமசிவாய ஸ்வாமிகள். சுவடியைத் தமக்குச் சிவஞான போதப் பாடம் சொல்லி வரும் பெரியோரிடத்துக் காண்பித்தனர்.

பரம்பரையாகக் கற்றுணர்ந்த பெரியோர்களாலும் அறியப்படாததும் அநுபூதிமயமானதுமான அரும்பெரும் தத்துவங்களை வேத ஆகம விரோதமின்றி எளிதில் விளங்குமாறு எடுத்துக் கூறியிருப்பதைப் பார்த்த சிவப் பெரியார் அதி ஆச்சரியம் அடைந்து, ஸ்வாமிகளின் பேராற்றலை வியந்து, "சிவாநுபூதிச் செல்வராகத் திகழும் ஸ்வாமிகளை அற்பமாக மதித்து அபராதியானோமே" என்று மனம் வருந்தி உடல் பதற ஸ்வாமிகள் முன் சென்று அடி பணிந்து நமஸ்கரித்து, "அடியேன் அறியாது செய்த பிழையை மன்னித்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொண்டனர். அவர்களால் மிகவும் பயபக்தியுடன் உபசரிக்கப்பெற்று ஸ்வாமிகள் சிலகாலம் அவ்விடமே தங்கியிருந்தது.

அவ்வூரில் வசித்து வந்த சிதம்பர முதலியார் என்பவருக்கு ஐம்பது வயது வரையிலும் சந்ததியில்லாமல் மடத்தில் இருந்துவந்த பெரியாரை அணுகி, "ஸ்வாமி தங்கள் கட்டளைப்படி இராமேசுவரம் முதலிய ஸ்தல யாத்திரைகளும் தனுஷ்கோடி முதலான தீர்த்த ஸ்நானங்களும், நாகப் பிரதிஷ்டை முதலிய பரிகாரங்களும், தண்ணீர் பந்தல், அன்னதானம் முதலிய தானங்களும் செய்து வந்தும் சந்தான பாக்கியம் கிடைக்கவில்லை. பூர்வம் நாங்கள் என்ன பாபம் செய்தோமோ? எங்களுடைய தீவினை நீங்குவதற்குச் சாத்திரங்களில் வேறு மார்க்கங்கள் சொல்லப்படவில்லையோ?" என்று பரிதாபத்துடன் வினவ அப்பெரியார் சிறிது நேரம் சிந்தனை செய்து " அன்பரே எவ்வித பாவங்களும் நீங்க ஓர் உபாயம் உண்டு. அதாவது பிரம்ம ஞானியாகிய ஒரு மஹானுக்குப் பிக்ஷை செய்வித்து அவருடைய பரிகலச் சேடத்தைத் தம்பதிகள் இருவரும்

திருவருட் பிரசாதமாக உட்கொண்டால் புத்திர சந்தானம் உண்டாகலாம்; அதையும் செய்து வருக" என்றனர். "தாங்கள் கூறும் பிரம்ம ஞானியை எங்ஙனம் நாங்கள் தெரிந்து கொள்வது?" என்று சிதம்பர முதலியார் கேட்க, "உமது பாக்கியவசத்தால் இப்பொழுது நமது மடத்தில் அத்தகைய மஹான் ஒருவர் எழுந்தருளியுள்ளார். நாம் சொல்லியபடி அவருக்கு பிக்ஷை செய்வித்து வரலாம்" என்று கூறி முதலியாருடன் ஸ்வாமிகள் திருமுன்னர் சென்று வணங்கி. "முதலியாருடைய பிக்ஷையை ஏற்று அனுக்கிரகிக்க வேண்டும்" என விண்ணப்பித்தனர். ஸ்வாமிகளும் கருணை கூர்ந்து முதலியார் கொண்டுவரும் பிக்ஷான்னத்தை ஏற்றுக் கொள்ளத் திருவுளங் கொண்டது.

இவ்வாறு தினந்தோறும் முதலியாரும் அவர் மனையாளும் மிகுந்த பக்தி சிரத்தையுடன் பிக்ஷை தயாரித்து ஸ்வாமிகளுக்குக் கொண்டு போய் படைத்து மீதமுள்ள சேடத்தை தாங்கள் இருவரும் புசித்து வந்தனர். ஒன்பதாம் நாளன்று ஸ்வாமிகள் பிக்ஷை செய்து முடிந்ததும், "கிருஹப் பிரவேசம் ஆகிவிட்டது; இனிமேல் பிக்ஷை கொண்டு வரவேண்டாம்" என ஆக்ஞாபித்து, அன்று இரவே ஸ்வாமிகள் அவ்விடம் நீங்கி, சஞ்சாரம் செய்யத் தொடங்கி விட்டது. அன்று முதல் சிதம்பர முதலியார் மனைவிக்குக் கர்ப்பம் உற்பத்தியாகி உரிய காலத்தில் புத்திரப் பேறடைந்து மனங்களித்திருந்தனர்.

நீலப்பாடியினின்றும் புறப்பட்ட ஸ்வாமிகள் சிதம்பரம், விருத்தாச்சலம், திருவண்ணாமலை, திருவேங்கடம் முதலிய தலங்கள் சென்று ஆங்காங்கு அற்புதச் செயல்கள் பல ஆற்றிக்கொண்டு, சென்னையை

அடுத்த திருவொற்றியூரை அடைந்து, கடற்கரையிலும், பட்டினத்து அடிகள் சமாதி ஆலயத்து அருகிலுமாக இருந்து வந்தது.

அந்நாளில் திருவொற்றியூரில் வசித்த வந்த ஓர் பிராமணர் குலப்பெண் துர்த்தேவதைகளால் பீடிக்கப் பெற்றும், பித்ததோடத்தாலும் சித்த ஸ்வாதீனம் இன்றி, உடை நழுவினும் அறியாமல் தெருவில் ஓடித்திரிதல், எதிர்ப்பட்டவர்களை வைதல், அடித்தல் முதலிய இன்னும் தகாத காரியங்களையும் செய்து வந்தனள். அப்பெண்ணின் தாய் தந்தையர், வைத்தியர்கள், மாந்திரிகர்கள் முதலானவர்களை அழைத்துப் பார்க்கச் செய்தனர். என்ன செய்தும் பைத்தியம் குணமாகாமல் சிகிச்சை செய்ய வருபவர்களுக்குத் துர்த்தேவதைகளால் உபத்திரவம் ஏற்பட்டது. மணி மந்திர ஔஷதப் பிரயோகங்கள் எதுவும் பயன்படாது மனவேதனை மிகுந்த தந்தையர், ஒற்றியூர் சிவபெருமான் சந்நிதியில் சென்று "அன்பர்க்கு இரங்கும் ஐயனே! என் புத்திரியைப் பற்றியுள்ள துர்த்தேவதைகள் நீங்கி அவள் சுகமடையத் திருவருள் புரிய வேண்டும்; இன்னும் மூன்று தினங்களுக்குள்ளாக அவள் சுயநிலை அடையாவிடில் யானே அவளுக்கு விடமிட்டு இறக்கச் செய்வேன்; இதனால் வரும் பாபம் தேவரீருக்கே அர்ப்பணம்" என்று பிரார்த்தித்துக் கொண்டனர்.

அன்று இரவு பிராமணர் கனவில் ஒற்றியூர் பெருமான் தவ வேடத்தில் தோன்றி "அன்ப! ஞானசித்தனாகிய ஜீவன் முக்தன் ஒருவன் அவதூதனாக கடற்கரையில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறான். நாளைக்காலையில் அவன் பட்டினத்தார் சமாதியின் அருகில் அமர்ந்து நிட்டை

கூடியிருப்பான். உன் புத்திரியைக் கொண்டு போய் அவன் கண்ணோக்கம் படும்படியான இடத்தில் வைத்துக் காத்திருப்பாயானால், அவன் நிட்டை கலைந்ததும் கண் திறந்து உன் புதல்வியை நோக்குவான்; அவன் கடைக்கண் பட்ட மாத்திரமே அவளைப் பிடித்திருக்கும் பேய்களும் நோய்களும் விலகிப்போம்" என்று அருளிச் செய்து மறைந்தனர்.

பிராமணர் மறுநாட் காலையில் தம் புதல்வியைக் கட்டுவித்து வண்டியிலேற்றி பட்டினத்தடிகள் சமாதியின் அருகில் சென்று, கனவில் பெருமான் அருளிய வண்ணம் அங்கு நிட்டையில் அமர்ந்திருந்த நமது ஸ்வாமிகளின் திருக்கண் பார்வை படும்படியான ஓர் இடத்தில் வைத்துக் கொண்டு காத்திருந்தனர்.

சிறிது நேரத்தில் ஸ்வாமிகள் நிட்டை கலைந்து கண் திறந்து எதிரில் இருக்கும் பிராமணப் பெண்ணைக் கடாட்சித்து அருளியது. அக்கணமே அப்பெண் சுயஉணர்வு பெற்று அவளைப் பற்றியிருந்த தேவதைகளும் நோய்களும் நீங்கி, பெண்மைக்குரிய பண்பாடுகள் அடைந்து சித்த பரிகாரத்துடன் எழுந்து ஸ்வாமிகளை வலம் வந்து நமஸ்கரித்து நின்று, "எங்கள் குல தெய்வமே! தேவரீருடைய கடைக்கண் நோக்கால் அடியேனுடைய உடற்பிணியும் நீங்கி என்னைப் பற்றியிருந்த துர்த்தேவதைகளின் ஆக்கமும் ஒய்ந்தன. இங்ஙனம் எனது பாவப்பிணியும் நீங்கும்படி அனுக்கிரகிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தனள்.

"அறியப்படுவனவாகிய ஜகஜீவ பர கற்பனைகளை விடுத்து, அறியும் அறிவாகவே இருக்கில் பாவ நோய் நீங்கும்" என்று திருவாய் மலர்ந்தது.

ஸ்வாமிகளின் கடாட்சம் பெற்ற பிராமணப்பெண் வீடு சேர்ந்ததும், தமது தந்தையாரை நோக்கி "அப்பா! எனது குருநாதர் உபதேசித்தபடி நான் ஒரு வாரம் தனித்திருந்து அப்பியாசம் புரிய வேண்டும். அதுவரையில் எனக்கு ஆகாரம் எதுவும் வேண்டியதில்லை. என்பால் எவரும் வந்து தொந்தரவு செய்யவேண்டாம். எட்டாம் நாள் பார்த்துக் கொள்ளலாம்" என்று சொல்லி ஓர் அறையில் சென்று தாழ்ப்பாளிட்டு ஆசனத்தமர்ந்து மனத்தை ஒருமுகப்படுத்தி ஸ்வாமிகளின் உபதேச வாக்கியத்தையே சிந்தனம் செய்து கொண்டு எட்டாவது நாளில் விதேக முத்தி அடைந்தனள்.

ஸ்வாமிகள் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு சென்னை, மயிலாப்பூர், திருக்கழுக்குன்றம், சிதம்பரம் முதலிய தலங்களில் சஞ்சரித்துக் கொண்டு காரைக்காலுக்கு எழுந்தருளிய காலத்தில் அங்கிருந்த 'மஸ்தான் சாகிப்' என்னும் பெரியவர் ஸ்வாமிகளை நோக்கி, "அப்பா! நீயும் நானும் எப்படியிருந்தால் எங்கும் நிறைந்த ஒரு பொருளாக இருக்கலாம்" என்று வினவ ஸ்வாமிகள் "நீ, நான், அது, இது என்னும் சுட்டு இறந்து நின்றால்" எங்கும் நிறைந்த பொருளா யிருக்கலாம் என்று விடையளித்து அப்பதியை விட்டுப் புறப்பட்டது.

நாகப்பட்டினம் மேலைக்கோட்டை வாசலை அடுத்த நிபந்தக்காரர் சாவடியில் ஸ்வாமிகள் சில காலம் தங்கியிருந்தது. நாள்தோறும் ஓர் அன்பர் ஸ்வாமிகளுக்கு பலகாரம் செய்து கொண்டு வந்து கொடுத்து உபசரித்து வந்தார். ஒருநாள் தாம் பலகாரம் எடுத்து வரமுடியாமல் இருந்தபடியால் தமது புத்திரன் மூலம் கொடுத்து அனுப்பி வைத்தார். பையன் வழியில் வந்து கொண்டிருந்த பொழுது

பக்கத்திலுள்ள வேலியிலிருந்து ஒரு சர்ப்பம் தீண்டி விட்டது. சிறுவன் பயத்தால் நடுநடுங்கி பலகாரங்களைத் தரையில் போட்டு விட்டு "ஸ்வாமி! பாம்பு கடித்து விட்டது" என்று அலறிக் கீழே சாய்ந்தான்.

ஸ்வாமிகள் தாம் இருந்த இடத்திலிருந்தே அதனை உணர்ந்து, "நகுலா" நாகன் பால் சிறுவன் அகப்பட்டுக் கொண்டான், விரைந்து செல்" எனத் திருவாய் மலர்ந்ததைப் பக்கத்தில் உள்ளவர் கேட்டு, காரணம் ஏதும் இல்லாமல் ஸ்வாமிகள் இவ்விதம் திடீரென்று அருளியது என்ன காரணமோ என்று திகைத்திருந்தனர்.

அரவினால் தீண்டப் பெற்ற பையன் கீழே விழுந்ததும் எங்கிருந்தோ கீரி ஒன்று வேகமாக ஒடி வந்து சர்ப்பத்தைக் கடித்துத் துண்டு துண்டாகச் செய்தது. சிறுவனைச் சர்ப்பம் தீண்டிய செய்தி கேட்ட தந்தை பெருந்துக்கத்துடன் ஓடிச்சென்று மூர்ச்சித்துக் கிடக்கும் சிறுவனைத் தூக்கிக் கொண்டு வந்து ஸ்வாமிகள் முன்னிலையில் கிடத்தி, "ஸ்வாமி! எனது செல்வச் சிறுவன் ஸ்வாமிகளுக்குப் பலகாரம் எடுத்து வரும் பொழுது வழியில் சர்ப்பம் தீண்டி மூர்ச்சையானான். சர்ப்பமும் கீரியால் துண்டிக்கப்பட்டு இறந்தது. கருணாமூர்த்தியான ஸ்வாமிகள் எனது குலம் விளங்க மைந்தனைக் காப்பாற்றி அருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்தனர்.

ஸ்வாமிகள் குறுநகை செய்து தன் திருக்கரத்தால் குழந்தையில் சிரசில் தடவ, விடம் இறங்கியது. சிறுவன் கண்திறந்து எழுந்து ஸ்வாமிகளை வணங்கினான். அருகில் இருந்தவர்கள் அதிசயித்து ஸ்வாமிகள் காரணம் ஏதும்

இல்லாமல் "நகுலா! நாகன் பால் சிறுவன் அகப்பட்டுக் கொண்டான். விரைந்து செல்" என்று கட்டளையிட்டதன் பொருளை உணர்ந்து. ஸ்வாமிகளின் திரிகால ஞானத்தையும் அனுக்கிரக சக்தியையும் போற்றி எங்கும் பிரஸ்தாபிக்க லாயினர்.

நாகப்பட்டினத்தில் நாள்தோறும் கூட்டம் அதிகரித்து வருவதைக் கண்ட ஸ்வாமிகள் அவ்விடம் விட்டுப் புறப்பட்டுத் திருவாரூர் வன்மீகபுரம் வந்து அங்குள்ள சோமநாத சுவாமி கோவிலிலும். பக்கத்தில் உள்ள ஓடம் போக்கி ஆற்றின் படுகையிலும். சில சமயம் கரையில் உள்ள விருட்சங்களின் அடியிலும் தங்கியிருந்தது.

ஸ்வாமிகள் எப்பொழுதும் யோக ஆசனத்தமர்ந்து கண்களை மூடி நிட்டையில் அமர்ந்திருக்கும். சில சமயங்களில் நிட்டை கலைந்து உபசாந்தமாக முகம் மலர்ந்து சுகாசனத்தில் அசைவற்று இருக்கும். பசி வந்த காலத்து தெருவில் சென்று வெளியில் கிடக்கும் அன்னம். பதார்த்தம் முதலியவற்றை உட்கொண்டு திரும்பவும் மேற்கூறிய இடங்களில் சென்று அமர்ந்து விடும். அப்பொழுது வன்மீகபுரத்தில் உள்ளவர்கள் சிலர் ஸ்வாமிகளை பைத்தியம் என்றும் பேயன் என்றும் கருதி உபேக்ஷயாக இருந்தனர். சிலர் மட்டும் 'இவர் பற்று முற்றும் அற்ற பரம ஞானி' என்று உணர்ந்திருந்தனர்.

சித்தூர் ஜில்லாவில் சோமநாத முதலியார் என்பவர் பிரசித்தமான தனவந்தர். அவரை நீண்ட நாட்களாகக் குன்ம நோய் மிகவும் வாட்டி வந்தது. பார்க்காத வைத்தியரும் சாப்பிடாத ஔஷதமும் இல்லை என்னும் படி சிகிச்சை

செய்து பார்த்தனர் ஒன்றும் பயனில்லை. கடைசியாக 'தில்லை கூத்தனின் திருவடிகளே சரணம் என்று உறுதி கொண்டு சிதம்பரத்திற்கு வந்தனர். அங்கு முறைப்படி சிவகங்கையில் நீராடி விநாயகப் பெருமான் சபாநாயகர். சிவகாமி அம்மை ஆகிய மூர்த்திகளை வணங்கி ஆசார சீலராய் விரதம் இருந்தார். இரண்டு நாட்கள் சென்றன. நோயின் உபத்திரவம் தாங்கமுடியவில்லை. 'இன்று தினம் ஆண்டவன் சந்நிதியில் சென்று பிராணத்தியாகம் செய்து கொள்வது' என்று முடிவு செய்தார். நல்ல கூர்மையான கத்தி ஒன்றைத் தீட்டி தயார் செய்து இடுப்பில் சொருகிக் கொண்டு அர்த்தயாம பூஜை சமயம் கோவிலுக்குள் வந்து தூண் மறைவில் நின்று கொண்டார். பூஜை முடிந்து திருக்காப்புச் செய்து அர்ச்சகர் முதலானோர் இல்லம் சேர்ந்தனர். ஒருவரும் இல்லை என்பதை உணர்ந்து சோமநாத முதலியார் தூண் மறைவிலிருந்து நடராஜப்பெருமான் திருச்சந்நிதியை அடைந்தார். "ஆனந்த நிருத்தம் செய்யும் எம் ஐயனே! வேண்டுவார் வேண்டுவதே ஈவாய் என மறைகள் முழங்குகின்றன. யான் படும் துன்பம் கண்டும் என் பிரார்த்தனைக்கு இரங்காதது ஏனோ? நீயும் கைவிட்டால் எனக்கு வேறு புகல் ஏது? இந்தச் சரீரத்துடன் இனி வாழ்தல் அரிது. திருவடியில் சேர்த்துக்கொண்டு அருள் புரிய வேண்டும்" என்று பலவாறு பிரார்த்தித்து இடுப்பிலிருந்த கத்தியை எடுத்துக் கழுத்தை அறுத்துக் கொள்ளத் தொடங்கினார். அப்போது மூலத்தானத்திலிருந்து "உனது நோய் இங்கே நிவர்த்தி ஆகாது; திருவாரூர் சென்று தக்ஷிணாமூர்த்தியிடம் பிரார்த்தித்தால் அக்கணமே நோய் நீங்கப்பெற்றுச் சுகம் பெறுவாய். பிராணத் தியாகம் செய்ய வேண்டாம்" என்று அசரீரி கேட்டது.

முதலியார் ஆனந்தக் கூத்தனின் அருட் கடாட்சத்தையும் தம்முடைய பெரும் பாக்கியத்தையும் எண்ணி எண்ணித் தம் கொடிய நோயையும் மறந்து இரவைக் கழித்தார். பொழுது புலர்ந்தது அதிகாரிகள் வந்து ஆலயத்தைத் திறந்தனர். ஒருவரும் அறியாதவாறு சோமநாத முதலியார் ஆலயத்தை விட்டு வெளிவந்து அன்று தினமே ஆரூரை நோக்கி விரைந்தார்.

ஸ்ரீநடராஜப் பெருமானின் கட்டளைப்படி சோமநாத முதலியார் திருவாரூர் சேர்ந்து தியாகராஜர் எழுந்தருளி யிருக்கும் திருக்கோவிலில் உள்ள ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு அபிஷேகம் ஆராதனை முதலிய சிறப்புக்கள் செய்வித்து அச்சந்நிதியில் அர்த்தயாமம் வரையில் தியானித்து இருந்தார். நோயின் உபத்திரவம் சிறிதளவும் குறைந்திலது. மேலும் செய்வகை அறியாது மனம் கலங்கி இரவில் நித்திரை செய்யும் பொழுது நடராஜப் பெருமான் துறவியாகக் கனவில் தோன்றி "நாம் சொல்லிய தக்ஷிணாமூர்த்தி இஃதல்ல; இவ்வூரில் நிர்வாணமாக ஒருவன் திரிகிறான். அவனிடம் செல்வாயாக" என்று அருளி மறைந்தனர்.

சோமநாத முதலியார் அதிகாலையில் எழுந்து நமது ஸ்வாமிகளைப் பற்றி விசாரித்துக் தேடிக்கொண்டு வரும்போது ஒரு வீட்டு வாசலில் கிடந்த இலையிலிருந்து எஞ்சிய உணவை நாய்க்கூட்டம் சூழப் புசித்துக் கொண்டிருந்த ஸ்வாமிகளைக் கண்டு. தம்மை ரட்சிக்கக் கூடிய தயாபரன் அவரேதான் என உள்ளுணர்வால் உறுதி கொண்டு மிக்க பயபக்தி விசுவாசத்துடன் திருவடிகளில் விழுந்து நமஸ்கரித்தனர்.

ஸ்வாமிகள் திரும்பிப் பார்த்துத் தன் கையில் இருந்த சேடத்தை முதலியார் வாயில் இட்டு, “உன்னை நடேசன் இங்கு அனுப்பினானோ?” என்று வினவிற்று.

ஸ்வாமிகளின் திருக்கரத்தால் அளிக்கப்பெற்ற பரிகலச்சேடத்தை உட்கொண்ட முதலியாருக்குத் தீராத குன்ம நோய் தீர்ந்தது. வெந்நீர் அன்னம் அன்றி வேறு வகை எதுவும் ஏற்றுக்கொள்ளாத அவரது குடல் அது முதல் எல்லாவித உணவு வகைகளையும் ஏற்றுச் சீரணித்தது. நோய் முற்றும் நீங்கிய பிறகும் முதலியார் ஸ்வாமிகளை விட்டு நீங்க மனமில்லாமல் அங்கேயே இருந்து ஸ்வாமிகளுக்கு அபிஷேகம் செய்வித்துப் பால், பழம், அன்னம் ஆகியவற்றைப் புசிக்கக் கொடுத்து எஞ்சிய சேடத்தைத் தானும் புசித்து மற்றையோருக்கும் வழங்கி வந்தார்.

முதலியார், தாம் நெடுநாட்களாக குன்ம நோயால் வேதனைப்பட்டதும், சிதம்பரம் வந்ததும் அங்கு பிராணத் தியாகம் செய்து கொள்ள முற்பட்டதும், அசரீரி வசனம் கேட்டதும், அதன்படி திருவாரூர் வந்ததும், ஆலயத்துள் தக்ஷிணாமூர்த்தியின் திருச்சந்நிதியில் அமர்ந்திருந்ததும், நடராஜர் கனவில் தோன்றி ‘நாம் சொல்லிய தக்ஷிணாமூர்த்தி இஃதல்ல, இவ்வூரில் நிர்வாணமாக ஒருவன் சுற்றித் திரிகிறான், அவனிடம் செல்வாயாக’ என்று அருள் புரிந்ததும், ஸ்வாமிகளைத் தேடி அடைந்து பரிகலச்சேடம் பெற்று உட்கொண்டதும், தமது தீராத நோய் இருந்த அறிகுறியே இல்லாது மறைந்ததும், பலரிடத்தும் விவரமாகச் சொல்லி, தில்லை நாயகர் திருவாய் மலர்ந்த வண்ணம் திருமேனி கொண்டு எழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தியே இவர் என்று நிச்சயித்துத் தோத்திரம் செய்து வந்தார்.

ஸ்வாமிகள் அருமை பெருமைகளை உணர்ந்த எல்லோரும் அந்நாள் முதற்கொண்டு 'தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகள்' என்றே போற்றிப் பாராட்டி வந்தனர்.

சோமநாத ஸ்வாமி கோவில், ஓடம் போக்கி ஆற்றின் கரையைச் சார்ந்த விருட்சங்களின் அடிகள், கமலாலயக் கரை, வீட்டுத் திண்ணைகள் ஆகியவற்றில் ஸ்வாமிகள் நியமமின்றி எதேச்சையாக இருந்து வரும்.

ஒருநாள் திருவாரூர் நகரில் உள்ள பண்டிதப் பிராமணரான தாசில்தார் வீட்டிற் சென்று அவருடைய படுக்கையில் ஸ்வாமிகள் படுத்திருந்தது. தாசில்தாரின் மனைவி இதைக் கண்டு பயந்து தாசில்தாருக்குச் சொல்லி யனுப்பினள். தாசில்தார் பெருங் கோபத்துடன் வந்து தம் சேவகனான கேசவ நாயக்கரை நோக்கி, "இந்தக் கிறுக்கனைப் பிரம்பால் அடித்து விரட்டு" என்று உத்தர விட்டார். கேசவ நாயக்கர் ஸ்வாமிகளின் மகத்துவம் நன்கு அறிந்தவர். "எஜமான்! இவர் கிறுக்கரல்ல, இவர் பெரிய மஹான். இவரைப் பிரம்பால் அடித்தால் எல்லையில் காலம் தொழு நரகில் துன்புற நேரிடும் இவரை அடிக்க கூடாது" என்று வணக்கமாகக் கூறினார்.

"என் உத்தரவுப்படி நீ நடக்கவில்லையானால் உன்னை வேலையினின்றும் நீக்கி விடுவேன்" என்று தாசில்தார் கடுங்கோபத்துடன் மொழிந்தார். "ஐயனே! ரொம்பவும் நல்லதாயிற்று. நான் இன்று முதல் தக்ஷிணா மூர்த்தியின் சேவகன். உங்கள் சேவகனல்ல" என்று கூறி வில்லையைக் கழற்றி வைத்து விட்டு வேகமாக நடந்தார் நாயக்கர்.

தாசில்தாரின் கோபம் அதிகரித்தது. தானே பிரம்பை எடுத்து ஸ்வாமிகளின் திருமேனியில் ஓங்கி அடித்தார். ஸ்வாமிகள் கண் விழித்து எழுந்து அடிபட்ட இடத்தைக் துடைத்து விட்டு "துடைபடும் துடைபடும்" என்று இருதரம் சொல்லி அங்கிருந்து வெளியிற் சென்றுவிட்டது. தாசில் தாருக்கு ஒரு வாரத்தில் உத்தியோகம் போய் விட்டது. மனைவியும் சிவபதம் சேர்ந்தனள். ஸ்வாமிகளை அடித்த கையும் உபயோகப்படாமல் நோயால் பாதிக்கப்பட்டது.

கேசவ நாயக்கர் அன்று தொடங்கி ஸ்வாமிகளின் பாத சேவகராகி கூடவே இருந்து, ஸ்வாமிகளின் திருமேனிக்கு எவ்வித அசௌகரியங்களும் ஏற்படா வண்ணம் பாதுகாத்து வந்தார்.

வன்மீகபுரம் பூசைத் துறையில் உள்ள மரத்தின் அடியில் ஓர் தினம் ஸ்வாமி அமர்ந்திருந்தது. மடத்து தெருவில் வசித்து வந்த ஓர் பிராமண ஸ்தீரி வழக்கம் போல் அங்கு ஸ்நானம் செய்து வஸ்திரம் அணிந்த வேளையில் ஸ்வாமிகளின் கடைக் கண்ணோக்கு அந்த அம்மையின் மார்பில் பால் பூரித்திருந்த தனத்தின் பால் விழுந்தது. அது ஒரு சிலந்திக் கட்டி போலும் என்று கருதிய ஸ்வாமிகள் இரண்டு தரம் 'ச்சூ.........ச்சூ' என்று சூள் கொட்டி விட்டுக் கண்கள் மூடி அமர்ந்திருந்தது.

பிராமண மாது உடையுடுத்தி ஜலம் எடுத்துக் கொண்டு இல்லம் சேர்ந்தனள். அங்கு குழந்தை பசியால் அழுது கொண்டிருந்தது. குழந்தைக்குப் பால் கொடுக்கும் பொருட்டுக் குழந்தையை எடுத்து மார்புடன் அணைக்க, அங்கு தனங்கள் இரண்டும் சுருங்கிப் பால்வற்றிப் புருஷர் மார்பு போன்று ஆகியிருந்தது. திடீரென்று இவ்வாறு

ஆனதற்குக் காரணம் தெரியாமல் மாமியாரிடம் சென்று, தான் ஸ்நானம் செய்யப்போனதும் அங்கு நிகழ்ந்ததும், வீடு திரும்பியதும் தனங்கள் மறைந்திருப்பதும் விவரமாகத் தெரிவித்தனள். பின் வீட்டிலுள்ளார் எல்லோரும் இதனை அறிந்து "ஸ்நான கட்டத்தில் அமர்ந்திருந்தவர் தக்ஷிணா மூர்த்தி ஸ்வாமிகளாக இருத்தல் வேண்டும். குழந்தையுடன் சென்று அவரிடம் பிரார்த்தித்துக் கொண்டால் அனுக்கிரகம் செய்வார்" என்று நிச்சயித்து, குழந்தையையும் எடுத்துக் கொண்டு பூசைத்துறைக்கு வந்தனர். சுவாமிகள் இன்னும் அங்கேயே அமர்ந்திருந்தது. பால் வேண்டி அழும் பாலகனை ஸ்வாமிகளின் திருவடியில் கிடத்தி. "கருணைக்கடலே! குழந்தை பாலில்லாமல் கதறுகின்றது. தாயிடத்துப் பால் சுரக்கும்படி கிருபை செய்ய வேண்டும்" என்று பிரார்த்தித்தனர். ஸ்வாமிகள் கண் திறந்து "அமுது இருக்கும் இடமா? பெருகும்! பெருகும்! என்று அருளி மௌனமானது. தாய் குழந்தையை கையில் எடுத்ததும் தனம் முன்போல் ஆகி பால் சுரந்தது. ஸ்வாமிகளின் அருள் திருவிளையாட்டையும் தங்கள் பாக்கியத்தையும் நினைந்து பெருங்களிப்படைந்து எல்லோரும் இல்லம் ஏகினர்.

சிக்கல் தலத்தில் பழநியப்ப செட்டியார் என்பவர் வாணிபம் நடத்தி வந்தார். அவர் குடும்ப வாழ்க்கையில் நாட்டமின்றி, நற்கதி அடையத்தக்க மார்க்கங்களை ஆராய்ந்து, 'எவ்வழியைப் பின்பற்றலாம்' எனச் சிந்தித்து வந்த சமயம் ஓர் நாள், "நாம் திருவாரூர் சென்று தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளை அடைந்து திருத்தொண்டு புரிந்து வந்தால் விரைவில் நற்கதி அடையலாம்" என்ற வசனம் அருகில் கேட்டது. அப்பொழுது தெருவில் சென்று கொண்டிருந்த இருவரில் ஒருவரிடமிருந்து அவ்வார்த்தை

வெளிப்பட்டது என்று தெரிந்ததும், நமக்கு வழி காட்டியாகவே அவ்வாக்கு ஏற்பட்டது என்று பழநியப்ப செட்டியார் நிச்சயித்து உடனே துறவு பூண்டு திருவாரூர் சேர்ந்தார். அங்கு ஸ்வாமிகளை அடைந்து ஆக்கப் பணிகலான பணி விடைகளைச் செய்து ஸ்வாமிகளின் கிருபா நோக்கத்தால் ஞானாநுபூதி பெற்றுத் திகம்பரராகத் திகழ்ந்து வந்தார்.

மடப்புரம் கவரையர் தெருவில் உள்ள கேசவ நாயக்கர், பாப்பண செட்டியார், சென்னப்ப நாயக்கர், வீரர் நாயக்கர், கண்ணப்ப நாயக்கர், வீரசைவ நஞ்சையர், மடத்து வெற்றி வேளையர், வைத்தியலிங்கம் பிள்ளை, சிதம்பரம் பிள்ளை, அப்பு முதலியார், முத்துச் சேண்டப் புரையர், கள்ளர் தெரு கணபதி வாண்டையார், பாப்புக் கண்டியர் மாரிமுத்து நாயக்கர், நாராயணசாமி சேண்டப் புரையர் முதலான பல பக்தர்கள் பழநியப்ப ஸ்வாமிகளின் பற்றற்ற தன்மையையும் ஸ்வாமிகளுக்குப் பணிவிடை செய்து வரும் சிரத்தையையும் கண்டு, "நாங்கள் திரவியம் தருகிறோம், தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளுக்கு இப்பொழுதே சமாதி ஆலயம் அமைக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டனர். பழநியப்ப ஸ்வாமிகளும் சம்மதிக்க ஸ்வாமிகளின் திருவுளக் குறிப்பு அறிந்து வேலை துவக்கலாம் என்று தீர்மானித்தனர்.

ஸ்வாமிகள் அப்பொழுது சோமநாதஸ்வாமி கோவிலில் உபசாந்தமாக வீற்றிருப்பதை அறிந்து, எல்லோரும் வந்து ஸ்வாமிகள் முன்னர் வணங்கி நின்றதும், ஸ்வாமிகள் இருக்கைவிட்டு எழுந்து நடந்தது. பழநியப்ப ஸ்வாமிகள் முதலிய அனைவரும் ஸ்வாமிகளைப்

பின்தொடர்ந்து வர ஸ்வாமிகள் ஆற்றங்கரையில் ஏறி சிறிது தூரம் கிழக்கு நோக்கிச் சென்று கரையைவிட்டு இறங்கி ஓர் இடத்தில் சிறிது நேரம் நின்று பின் தெற்கு நோக்கிச் சென்று விட்டது.

ஸ்வாமிகள் சிறிது நேரம் நின்ற இடமே ஆலயம் அமைப்பதற்கு ஸ்வாமிகளால் குறிக்கப் பெறும் இடமாகும் என்று கருதி, அவ்விடத்தில் அடையாளமாக இருக்கட்டும் என்று அவர் மணலைக் குவித்து வைக்கையில், அங்கு ஒரு பொற்காசு இருக்கக்கண்டு எல்லோரும் பெரு மகிழ்ச்சியடைந்து நல்ல நாள் பார்த்து ஆலய முகூர்த்தம் செய்தனர்.

ஆலயம் அமைக்கவிருக்கும் செய்தி ஊரெங்கும் பரவலாயிற்று. திருவாரூர் பாவா முதலியார் முதலிய தனவான்களும், திருவாரூரிலும் பக்கத்து ஊர்களிலும் உள்ள மிராசுதார்களும், ஊர் ஜனங்களும் தாமாக முன் வந்து பணம், செங்கல், கருங்கல், சுண்ணாம்பு ஆகியவற்றை வழங்கினர். ஸ்வாமிகளை தரிசிக்க வருபவர்கள் செலுத்தி வரும் பாதகாணிக்கைப் பொருள்களும் சேர்ந்தன. பழநியப்ப ஸ்வாமிகள் முன்னின்று கர்ப்பக் கிருஹம், அர்த்த மண்டபம், மஹா மண்டபம், சுற்றுப் பிரகாரம், பத்தி மண்டபம், கோபுரம், முன் மண்டபம், படித்துறை முதலான திருப்பணிகள் செய்து, ஸ்வாமிகள் ஐக்கியம் அடைந்த பின்னர் கர்ப்பக் கிருஹத்துள் சமாதி வைப்பதற்கான குகையும் சுரங்க வழியும் அமைத்து, தஞ்சாவூர் சரபோஜி மன்னர் காசியிலிருந்து கொண்டு வந்து கொடுத்த பாண லிங்கத்தைக் கர்ப்பக் கிருஹத்தில் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகமும் நடத்தி வைத்தனர். அது முதல் நித்திய நைமித்திக பூஜைகளும் சிறப்பாக நடந்து வரலாயின.

ஆலயப் பணி நிறைவெய்தியதும் பூஜை முதலிய கைங்கர்யங்கள் குறைவின்றி நடந்து வரும் பொருட்டு பூஸ்திதி ஏற்படுத்த வேண்டுமென்று கருதிய வடபாதி மங்கலம் முதலியார், தம்முடைய ஏராளமான நிலத்தில் பத்து வேலி நிலத்தை ஸ்வாமிகள் பெயருக்குத் தான சாஸனம் எழுதி, அதை ஸ்வாமிகள் பாதத்தில் வைத்து பேரன்புடன் வணங்கி, "ஸ்வாமி! பத்து வேலி நன்செய் நிலத்தை ஸ்வாமிகளுக்கு தான சாஸனம் செய்து வைத்திருக்கிறேன். கிருபை கூர்ந்து அங்கீகரித்து அருள்புரிய வேண்டும்" என்று பிரார்த்தித்தனர். ஸ்வாமிகள் அந்தச் சாஸனத்தை எடுத்து, "அப்பா! நீ நமக்குக் கொடுத்தாய்; நாம் உனக்குக் கொடுக்கிறோம். நீ கெட்டியாக வைத்துக் கொள், குறைவு வராது" என்று சொல்லி முதலியாரிடமே திரும்பக் கொடுத்து விட்டது.

முதலியார் சாஸனத்தைத் திரும்பவும் பெற்றுக் கொள்ள மனமில்லாமல் தயங்கியதைக் கண்டு ஸ்வாமிகளைச் சூழ்ந்து நின்ற பெரியோர்கள், "ஐயா! ஸ்வாமிகள் திருக்கரத்தால் அளிப்பது என்றும் குறையாத பெரும் செல்வமாகும்" தயங்காமல் ஏற்றுக் கொள்ளுங்கள் என்று சொல்ல முதலியார் ஸ்வாமிகளை வணங்கிச் சாஸனத்தைப் பெற்றுக் கொண்டார்.

'திருவாரூர்த் தேரழகு' என்ற பிரசித்தமான ரத உற்சவதினத்தன்று தஞ்சையிலிருந்து சரபோஜி மன்னர் விஜயம் செய்திருந்தார். மன்னர் ஸ்வாமிகளிடத்துப் பேரன்புடையவர். ஆலயத் திருப்பணி நிறைவுற்று பூஜா கைங்கர்யம் நடந்து வருவதையும் அறிந்திருந்தார். அன்று மாலை ஸ்வாமிகளைத் தரிசித்துத் தக்க கிராமம் ஒன்றைச்

சாஸனம் செய்து வைக்கவும் கருதினார். தனது சமஸ்தான அதிகாரியை வரவழைத்து, "நாம் இன்று மாலை தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளைத் தரிசித்து வர விரும்புகிறோம். அவ்வமயம் அருகில் உள்ள கிராமங்களில் ஒன்றை ஸ்வாமிகளுக்குத் தானம் செய்யவும் கருதியிருக்கிறோம். இவ்விஷயத்தை ஸ்வாமிகளின் சிஷ்யர்களுக்குத் தெரிவித்து, தானம் செய்யத் தக்கதான கிராமத்தையும் தேர்ந்து வைப்பாய்" என்று கட்டளையிட்டார்.

சமஸ்தான அதிகாரியானவர் மன்னரின் கட்டளைப்படி ஸ்வாமிகளுக்குத் தானம் செய்யத் தகுதியான சில கிராமங்களைக் குறித்துக் கொண்டு, தாசில்தாரை வரவழைத்து, "நீர் தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகள் இருப்பிடம் சென்று அங்குள்ளவர்களிடம், மன்னர் மாலையில் ஸ்வாமிகளைத் தரிசிக்க வருகிறார்கள். அப்போது இதில் குறித்துள்ள கிராமங்களில் விருப்பமான ஒன்றை மன்னரிடம் கேட்டுப் பெற்றுக் கொள்ள வேண்டும்" என்று தெரியப்படுத்துங்கள் என்று சொல்லி கிராமங்களின் பெயர் குறித்துள்ள சீட்டையும் கொடுத்து வரும்படி உத்தரவிட்டார்.

தாசில்தார் சீட்டைப் பெற்றுக் கொண்டு பழநியப்ப ஸ்வாமிகளாகிய திருப்பணி ஸ்வாமிகளை அணுகி மன்னரின் கட்டளையைத் தெரிவித்து சீட்டையும் கொடுத்தார்.

திருப்பணி ஸ்வாமிகள் சீட்டைக் கையில் வைத்துக் கொண்டு கோவில் குடவரை வாயிலை அடைந்த சமயம், கோவில் மஹாமண்டபத்தில் கட்டிலில் படுத்திருந்த ஸ்வாமிகள், "சகல உலகமும் நம்மிடத்தில் ஆகாயத்தில் நீல பீதாதி போல் ஏகதேசத் தோற்றமாயிருக்க, ஒருவன்

சிறிது நிலம் கொடுக்கிறானாம் அதை ஒருவன் பெற்றுக் கொள்கிறானாம்; இவனன்றோ கானல் நீரைப் பருகிக் களை தீரக் கருதினான்" என்று திருவாய் மலர்ந்தது. திருப்பணிச் சுவாமிகள் இதைக் கேட்டு பயங் கொண்டு சுட்ட சட்டியைக் கைவிடுவது போல் தம் கையில் வைத்திருந்த சீட்டைத் தூர எறிந்து விட்டனர்.

சரபோஜி மன்னர் மாலையில் தமது பரிவாரங்களுடன் தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளின் திருமுன்னர் விஜயம் செய்து தம்முடன் எடுத்துவந்த பழவர்க்கங்கள், பால், பலகாரங்களைச் சமர்ப்பித்துப் பிரதட்சிணம் செய்து நமஸ்கரித்து எழுந்து, ஸ்வாமிகளுக்காக விசேட சிரத்தையுடன் தயார் செய்து வந்த ஸ்வர்ணப் பாதுகைகளைத் திருவடிகளில் பூட்டி, தந்தத்தால் ஆகிய யோக தண்டத்தைச் சமர்ப்பித்து, பீதாம்பரங்களால் திருமேனியை அலங்கரித்துப் பாத காணிக்கையாகச் சில திரவியங்களையும் வைத்து வணங்கி, ஸ்வாமிகளின் அருட் பிரசாதமாகிய திருநீற்றை விரும்பி இரு கைகளையும் நீட்டி நின்றார். ஸ்வாமிகள் இவை யாதொன்றையும் மதியாமல் மன்னருக்குப் பிரசாதம் வழங்காதிருப்பதைக் கண்ட திருப்பணிச் சுவாமிகள், விபூதி மடலை எடுத்து, "ஸ்வாமி மன்னருக்கு விபூதி பிரசாதம் அளித்தருள வேண்டும்" எனப் பிரார்த்தித்தனர். ஸ்வாமிகள் உபேட்சையாக திருநீற்றை எடுத்து எறிந்தது. பாக்கியவசமாக அது மன்னரின் கரத்தில் விழுந்தது. மன்னர் அதனை அன்புடன் தரித்துக் கொண்டு தம் கட்டளைப்படி ஸ்வாமிகளின் சீடர்கள் கிராமதானம் கேட்பார்களா என்று எதிர்பார்த்து நின்றார். எல்லோரும் மௌனமாக இருக்கவே மன்னர் ஸ்வாமிகளை நோக்கி "நம்மால் இந்த இடத்திற்குச் செய்யத்தக்கது யாது? கட்டளையிட வேண்டும்" என்று

பிரார்த்திக்க, ஸ்வாமிகளின் திருவுளக் குறிப்பை உணர்ந்த திருப்பணிச் சுவாமிகள் "மன்னர் இச்சன்னிதானத்தில் சிரத்தை வைக்க இவ்விடத்திற்கு யாதொரு குறையும் இல்லை" என்றனர்.

மன்னரின் விருப்பம் நிறைவேறவில்லை; ஆயினும் வேறு வகையாகத் தமது காணிக்கையைச் செலுத்தத் தீர்மானித்தார். பொன் மொஹராக்காள் நூற்றெட்டால் ஸ்வாமிகளின் திருவடிகளில் அருச்சித்து, மேலும் சில மொஹராக்களைக் காணிக்கையாகச் செலுத்தினார்.

பூஜா காலத்தில் முழக்குவதற்காக, தமது யானை மீது கட்டி முழக்கி வந்த பெரிய நகரா ஒன்றையும் இறக்கி வைத்து மன்னர் இருக்கை சேர்ந்தார்.

நாகப்பட்டினம் வாணக்காரத் தெருவில் சுப்பபிள்ளை என்பவர் ஒருவர் இருந்தார். அவர் ஸ்வாமிகளின் மகத்துவத்தைக் கேள்வியுற்று, புத்திரப் பேறும், பொருட் செல்வமும் விரும்பி தம் மனைவியை உடன் அழைத்துக் கொண்டு திருவாரூர் சேர்ந்து ஸ்வாமிகளைத் தரிசித்தனர். குருவாரம் தோறும் ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை செய்வித்து சேடத்தைத் தாங்கள் உட்கொண்டு வர, மகப்பேறு அடைந்து செல்வமும் நிறைந்து விளங்கினர். ஸ்வாமிகளின் கிருப்பா கடாட்சம் பெற்ற சுப்பபிள்ளை ஸ்வாமிகளிடம் மாறாத அன்புடையராய் பல விதத்தாலும் கொண்டாடி வந்தார்,

சுப்பபிள்ளை, ஒரு சமயம் வியாபார நிமித்தம் திரவியங்களுடன் முத்துப் பேட்டைக்குப் புறப்பட்டார். முத்துப் பேட்டையைச் சேர்வதற்கு முன்பாகவே இருட்டி விட்டது. அவ்வூரை அடைவதற்கு ஒரு மைல் அளவில்

வந்து கொண்டிருந்த பொழுது திடீரென்று சில திருடர்கள் தோன்றி வண்டியை மறித்து வண்டியிலிருந்த சுப்ப பிள்ளையைக் கீழே இழுத்துத் தள்ளி இம்சித்தனர். தனியாக இருந்த சுப்பபிள்ளை பயந்து நடுங்கி ஆபத் சகாயனான ஸ்வாமிகளை மனத்தில் நினைத்து, "தக்ஷிணாமூர்த்தி! யான் என்ன செய்வேன்? நீயே தஞ்சமென்றும், காப்பாற்ற வேண்டும் ஐயனே!" என்றும் பிரலாபித்தார்.

அப்பொழுது முக்காத தூரத்தில் உள்ள திருவாரூரில் மடாலயத்தினுள் நித்திரையில் இருந்த ஸ்வாமிகள் விழித்து எழுந்து வெளியில் வந்து "அடே வீரா! சுப்பன் திருடன் கையில் அகப்பட்டுக் கொண்டான், சீக்கிரம் போடா" என்று இருதரம் உரக்கக் கூறி உள் சென்று சயனித்தது. மடத்தில் உள்ளவர்கள் காரணம் அறியாமல் திகைத்தனர்.

சுப்ப பிள்ளையைத் திருடர்கள் சூழ்ந்து கொண்ட சமயத்தில், பக்கத்தில் உள்ள பனை மரங்களில் கள் இறக்குபவர்கள் போல் தோற்றங் கொண்ட பன்னிரண்டு பேர்கள், "இதோ வந்து விட்டோம்" என்று ஓடி வந்து திருடர்கள் மேல் விழுந்து அடித்தனர். உயிர் தப்பினால் போதுமென்று திருடர்கள் ஓடி விட்டனர்.

வந்த ஆட்கள், "ஐயா! பயப்பட வேண்டாம், நீங்கள் எங்கே போக வேண்டும்" என்று கேட்டனர். "நான் முத்துப்பேட்டை செல்கிறேன். நீங்கள் நல்ல தருணத்தில் வந்து சேர்ந்தீர்கள், இல்லாவிட்டால் என் கதி என்ன ஆகியிருக்குமோ? எல்லாம் தக்ஷிணாமூர்த்தியின் திருவருள்" என்று மிகுந்த நன்றியுடன் தெரிவித்தார் பிள்ளை. "நல்லதாயிற்று, நாங்களும் முத்துப்பேட்டைக்குத் தான் போகிறோம் வாருங்கள்" என்று கூறி முத்துப் பேட்டை

சமீபித்த வேளையில், "ஐயா! நாங்கள் தக்ஷிணாமூர்த்தியின் ஏவலாளர்கள். இனிப் பயமின்றி நீங்கள் ஊருக்குள் சென்று வியாபாரத்தை முடித்து வாருங்கள்" எனச் சொல்லி மறைந்தனர்.

முத்துப் பேட்டையில் தமது காரியங்களை முடித்துக் கொண்டு சுப்பபிள்ளை நேராகத் திருவாரூர் வந்து ஸ்வாமிகளைத் தரிசித்து திருடர்களால் நேர்ந்த ஆபத்தையும், ஸ்வாமிகளை நினைத்துக் காப்பாற்ற வேண்டுமென்று பிரார்த்தித்ததையும், மரமேறிகள் போல் இருந்த பன்னிருவர் அத்தருணத்தில் வந்து உதவியதையும் பின்னர் அவர்கள் 'தக்ஷிணாமூர்த்தியின் ஏவலாளர்கள்' என்று சொல்லி மறைந்ததையும், எல்லோரிடமும் விஸ்தாரமாகக் கூறினார். நான்கு தினங்களுக்கு முன் ஸ்வாமிகள் படுக்கையிலிருந்து எழுந்து வெளியில் சென்று, "அடே வீரா! சுப்பன் திருடர் கையில் அகப்பட்டுக் கொண்டான். சீக்கிரம் போடா!" என்று கூறியதன் காரணத்தை உணர்ந்து மற்றவர்கள் சுப்ப பிள்ளையின் பாக்கியத்தை வியந்து கொண்டாடினர்.

சுப்ப பிள்ளையும் அந் நிகழ்ச்சிகளைக் கேட்டுப் பேரானந்தங் கொண்டு ஸ்வாமிகளை வணங்கி "ஆபத்தில் காத்த அருள் தெய்வமே! எந்தனை என்றும் கைவிடாமல் காப்பாற்றி அருள் புரிய வேண்டும். எனது உடல், பொருள், ஆவி மூன்றையும் நின் திருவடிகளில் அர்ப்பணம் செய்கிறேன்" என்று பலவாறு பிரார்த்தித்துக் கொண்டார். அவ்வண்ணமே வடக்குரத வீதியில் ஸ்வாமிகள் பெயரால் மடம் ஒன்று நிறுவி அதில் ஸ்வாமிகளின் திருவுருவத்தையும் அமைத்து வழிபட்டு வந்தார்.

திருவாரூர் தியாகராஜ சுவாமியின் திருத்தேர் உலகப் பிரசித்தமானது. அதை விடப் பெரிய தேர் எங்குமே இல்லை என்பர். தேர்த் திருவிழாக்காண நாட்டின் பல பாகங்களிலிருந்து மக்கள் வந்து கூடுவர். சந்நியாசிகளும் தங்கள் தங்கள் சிஷ்யர்களுடன் திரளாக எழுந்தருளி, சன்மார்க்க உபதேசம் செய்வர். இவ்விழாக்காண ஒரு சமயம் வட தேசத்திலிருந்து பரமஹம்ச பிராம்மண சந்நியாசிகளாகிய ஸ்ரீ கிருஷ்ணானந்தகிரி ஸ்வாமிகள் முதலான பல துறவியர் எழுந்தருளியிருந்தனர். அவர்கள் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளின் ஞானாநுபூதி நிலையினையும் சாப அனுக்கிரக சித்தியையும் அறிந்து ஸ்வாமிகளைத் தரிசிக்கப் பேராவல் கொண்டனர். பல ஆண்டுகள் தெரிசனம் கிட்டவில்லை. ஸ்வாமிகளின் இருக்கை சேர்ந்து தரிசித்து வரலாமென்றால் தங்கள் பிராமண வைதீக கூட்டத்தார் குறை கூறக் கூடுமென்று கருதி எதேச்சையாக எதிர்ப்படக் கூடிய வாய்ப்பை எதிர்பார்த் திருந்தனர்.

ஒருநாள் கமலாலயத்தின் மேல்கரையில் உள்ள எக்ஞேசுவரர் ஆலயத்தில் யதீஸ்வரர்களான துறவியர் கூடி, சாஸ்திர விசாரம் செய்து கொண்டிருந்தனர். அவ்வமயம் கீழ்கரையில் பெருங்கூட்டம் சேர்ந்திருப்பதைக் கண்டு சிலர் எழுந்து வந்து தெருவில் செல்வோரை விசாரிக்க, அவர்கள் “தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகள் அங்கு வந்திருக்கின்றார். அவரைத் தரிசிப்பதற்காகத் தான் கூட்டம் சேர்ந்திருக்கிறது” என்றனர்.

ஸ்ரீ கிருஷ்ணானந்தகிரி ஸ்வாமிகள் ஆகியோர் இதனை அறிந்தும், அறியாதவர் போல் சாஸ்திர விசாரணையை முடித்து இன்று புனித நாளாகையால்,

“கமலாயத்தைப் பிரதட்சிணம் செய்து வரலாம்” என்றும் வரப் பிரியமுள்ளவர்கள் வரலாம் என்று கூறிப் புறப்பட்டு வலமாக நடந்து கீழ்கரையை அடைந்தனர். அங்கு படித்துறையில் பெருங்கூட்டத்தின் நடுவில் கடும் வெயிலையும் பொருட்படுத்தாது படுத்திருக்கும் ஸ்வாமிகளையும் அவர்தம் திருமுகப் பொலிவையும் கண்டு பரவசம் ஆகி, ‘எங்கேனும் விருட்ச நிழலில் இருந்தால் சுகமாயிருக்குமே’ என்று மனத்துள் நினைத்தனர். இவர்களின் உள்ளக்கருத்து உணர்ந்து ஸ்வாமிகள், “சேதனம் ஆகிய ஆன்மாவுக்கு அசேதனம் ஆகிய .விருட்சமா சுகத்தைத் தரும்? தரும் எனில் கானல் ஜலமும் உஷ்ண பூமியைக் குளிரச் செய்யும். உண்மை நோக்கு இன்மையே பேதப் பிரதீதிக்கு மூலம்” என அருளிச் செய்து மௌனமாயிருந்தது. ஸ்ரீ கிருஷ்ணானந்தகிரி ஸ்வாமிகள், ஸ்ரீ சங்கர சரஸ்வதி ஸ்வாமிகள், ஸ்ரீ ராமானந்த பாரதி ஸ்வாமிகள் மூவரும் தங்கள் மனத்தில் நினைத்ததற்கு இணங்க ஸ்வாமிகள் பதில் அளித்ததும், ஞானோபதேசம் செய்ததும் தங்களுக்காகவே என்று மனத்துள் உணர்ந்தனர். சற்று நேரம் அங்கு நின்று மனத்தால் ஸ்வாமிகளுக்கு உற்ற முறையில் வழிபாடு செய்து, கமலாலயப் பிரதட்சிணத்தைப் பூர்த்தி செய்து மீண்டும் மேல்கரை சேர்ந்து, தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளை மனத்தில் தியானித்து, ஸ்வாமிகள் சயனித்திருக்கும் கீழ்கரையை நோக்கி கோபுர தரிசனம் செய்வதாக மற்றையோர் கருதும் வண்ணம் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தனர். கூட இருந்த எல்லோரும் அவர்களைப் பின்பற்றி சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தனர்.

பின்னர் ஸ்ரீ கிருஷ்ணானந்தகிரி ஸ்வாமிகள், ஸ்ரீ சங்கர சரஸ்வதி ஸ்வாமிகள், ஸ்ரீ ராமானந்த பாரதி ஸ்வாமிகள் ஆகியோர் தனித்திருந்த சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணானந்தகிரி

ஸ்வாமிகள், "இன்று தினம் நமக்கு மிக்க சுபதினம் ஆகும். நீண்டகாலமாக எமது சித்தத்தில் எழுந்து கொண்டிருந்த சங்கற்பம் இன்றோடு தீர்ந்தது. நாம் மனத்தில் எண்ணியதற்குத் தக்க விதத்தில். சேதனம் ஆகிய ஆன்மாவுக்கு அசேதனம் ஆகிய விருட்சமா சுகத்தைத் தரும்? தரும் எனில் கானல் ஜலமும் உஷ்ண பூமியைக் குளிரச் செய்யும். உண்மை நோக்கு இன்மையே பேதப் பிரதீதிக்கு மூலம் என்று தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகள் அருளியது. கல்லாலின் கீழ் சிவபெருமான் தக்ஷிணாமூர்த்தமாக அமர்ந்து சனகாதி முனிவர்களுக்கு மௌன உபதேசத்தால் உணர்த்தியது போலாகும்" என்று மொழிந்தனர். ஸ்ரீ சங்கர சரஸ்வதி ஸ்வாமிகளும் ஸ்ரீ ராமானந்த பாரதி ஸ்வாமிகளும், "யாங்களும் அவ்வாறே கருதுகின்றோம். ஸ்வாமிகள் திருவாய் மலர்ந்த வாக்கியத்தின் பொருளை யாவரும் உணரும் வண்ணம் விரித்து உரைக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டனர்.

ஸ்ரீ கிருஷ்ணானந்தகிரி ஸ்வாமிகள் மிக்க ஆனந்தமடைந்து, தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளின் தத்துவ, உபதேசம் பற்றி மூன்று நாட்கள் பல அறிஞர்களும் கூடிய சபையில் விளக்கம் செய்தனர். இவ்விளக்கம் கேட்ட மற்றைய யதீஸ்வரர்கள், 'சிஞ்ஞாசுக்களாகிய சாதுக்களுக்கு இவ்விளக்கம் பெரிதும் பயனுடையதாக இருப்பதால் இதனை நூல் வடிவில் ஆக்கி அருள வேண்டும் என்று பிரார்த்தித்தனர். அதற்கு இசைந்து வடமொழியில், "ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகள் வாக்கிய சிந்தனம்" என்ற பெயரில் நூல் இயற்றி வெளியிட்டனர்.

திருவாரூர் கொத்தத் தெருவில் வசித்து வந்த வேளாளர் குலத்தவரான அருணாசலம் பிள்ளை என்பவர்

தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளிடத்தில் மிகுந்த பக்தி விசுவாசம் உடையவர். கல்வி அறிவு ஒழுக்கங்களிலும் குருலிங்க சங்கம பக்தியிலும் சிறந்தவர். கொட்டகைப் பந்தல் அலங்கார வேலைகளில் கைதேர்ந்தவர். அவர் ஸ்ரீரங்கம் ரங்கநாதப் பெருமாள் ஏகாதசி விழாவிற்கான கொட்டகைப் பந்தலில் உயரமான இடத்தில் இருந்து ரேக்கு, வர்ணத் தகடுகள் ஒட்டிச் சிங்காரம் செய்து கொண்டிருந்த சமயம் சாரத்திலிருந்து தவறிக் கீழே விழுந்து விட்டார். அவர் எப்பொழுதும் தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளைச் சிந்தனை செய்து கொண்டிருப்பவர். ஆதலால் சாரத்திலிருந்து தவறியபோது "தக்ஷிணாமூர்த்திக்கு அபயம்" என்று சொல்லி விழுந்தார்.

அப்போது திருவாரூர் கமலாயத்தின் மேல்கரையில் அமர்ந்திருந்த நமது ஸ்வாமிகள், தமது வலக் கரத்தை உயரத்தூக்கி, "தக்ஷிணாமூர்த்தியை நம்பினால் தக்ஷிணா மூர்த்தி என்ன செய்வான்" என்று கூறி வலக்கரத்தால் ஒரு பளுவான பொருளைத் தாங்கிக் கீழே வைப்பது போல் வைத்தது. அருகில் நின்றவர்கள், அந் நிகழ்ச்சியைக் கண்டு, "எங்கோ ஓர் அதிசயம் நடந்துள்ளது. அதற்குப் பாத்திரமான பாக்கியவான் யாரோ தெரியவில்லை" என்று உரையாடினர்.

ஓங்கி வளர்ந்த பனைமர அளவு உயரத்திலிருந்து தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிகளின் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டு கீழே விழுந்த அருணாசலம் பிள்ளை, தம்மை யாரோ தாங்கி மெதுவாகப் பூமியில் வைப்பது போல் உணர்ந்தார். அவருக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படவில்லை. தாம் வேலை செய்து கொண்டிருந்த இடத்தை அண்ணாந்து பார்த்த அருணாசலம் பிள்ளை, அவ்வளவு உயரமான இடத்திலிருந்து தவறி விழுந்தும் தாம் முன் போலவே உபாதி

எதுவும் இல்லாமல் இருக்கும் விந்தையை நினைத்துப் பிரமையடைந்து, வேலையை விட்டு ஸ்வாமிகளைத் தரிசிக்கத் திருவாரூர் நோக்கி விரைந்தார்.

மூன்றாவது நாளில் நமது ஸ்வாமிகளின் சந்நிதி சேர்ந்து திருவடிகளில் நமஸ்கரித்து எழுந்து, கைகூப்பி நின்று, "அருட்பெருங் கடலே! குணப் பெருங் குன்றே, கொட்டகைப் பந்தலினின்றும் தவறி விழுந்த என்னைத் தாங்கிக் கொண்ட தயாநிதியே! மதிப்பறு நிதியமே! மாசில்லாமணியே உமது கருணைத் திறத்தை எவ்வாறு இயம்ப வல்லேன்? இனிமேல் ஸ்வாமிகளுக்குத் திருத் தொண்டு புரிவதே எனது வேலையாகும்" என்று பலவாறு தோத்தரித்தனர்.

அருணாசலம் பிள்ளையின் மூலம் ஸ்ரீரங்கத்தில் நடைபெற்ற அதிசயச் சம்பவத்தைச் செவியுற்ற மற்ற அடியார்கள், மூன்று தினங்கள் முன்னதாகக் கமலாலயத்தின் மேல் கரையில் ஸ்வாமிகள் வலக்கரத்தை உயர்த்தி மெதுவாகக் கீழே வைத்ததும், 'தக்ஷிணாமூர்த்தியை நம்பினால் தக்ஷிணாமூர்த்தி என்ன செய்வான்' என்று திருவாய் மலர்ந்ததும் அருணாசலம் பிள்ளையைக் காப்பாற்றும் பொருட்டே என்று உணர்ந்தனர். அது முதற்கொண்டு அருணாசலம் பிள்ளையும் குடும்பப் பற்று நீக்கித் துறவு பூண்டு, ஸ்வாமிகளைக் கணமும் நீங்காது கண்களை இமை காப்பது போல் உடன் இருந்து திருத்தொண்டு புரிந்து வந்தார். தொண்டின் விசேடத்தாலும், சுவாமிகள் வீட்சண்யத்திலும் சில நாள் சென்றபின் சொரூபானுபூதியுற்று சுட்டிறந்து நின்று திகம்பரர் ஆகினார்.

ஸ்வாமிகளின் சர்வக்ஞத் தன்மையும், தபோமஹிமையும், அருட்கடாட்சமும் நாடெங்கும்

பிரசித்தமாகி ஸ்வாமிகள் சந்நிதியில் எப்பொழுதும் அன்பர் கூட்டம் பெருகலாயிற்று.

ஏனங்குடி புத்தகரம் என்னும் சிற்றூரில் வேளாண் செட்டியார், மரபில் சுவாமிநாத செட்டியார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் ஈஸ்வர பக்தி நிறைந்தவர். அடியார்கள் பால் அன்பு மிகுந்தவர். வேதாந்த சாத்திர சிரவணம், மனனம், நியமமாக உடையவர். இல்லற தர்மத்தை நெறிவழாது இயற்றி வருபவர். அவருக்கு விசாலாட்சி என்று ஒரு புத்திரி பருவகாலம் வருவதற்கு முன்பே அவளுடைய தேகம் முழுமையும் மேகரோகம் பரவி கரும் பாறைபோல் தடித்திருந்தது. நாளுக்கு நாள் ரோகம் அதிகரித்துத் தினவு தாங்காமல் கைகளால் சொரிதல், செங்கல் முதலியவை கொண்டு தேய்த்தல், பசுக்கள் போன்று மரம், கல் முதலியவற்றில் உராய்தல் ஆகிய காரணங்களால் சரீரம் முழுமையும் ரத்தம் வடியலாயிற்று. பின்னும் சரீரத்தில் ஊன் வடிதல், துர்க்கந்தம் வீசுதல், ஈக்கள் மொய்த்தல் ஆகியவற்றால் மற்றவர்களும் அருவருப்படைந்தனர். சுவாமிநாதன் செட்டியார் தமது புத்திரியின் நோய் தீர்க்க அரும் பாடுபட்டார். எல்லாவிதமான வைத்திய முறைகளையும் செய்து பார்த்தார். ஏராளமான பொருள் செலவு ஆனதைத் தவிரப் பயன் ஒன்றும் இல்லை.

செட்டியார் ஒரு நாள் வெளியில் சென்றிருந்த சமயம் சிவனடியாரான பெரியார் ஒருவரைச் சந்தித்து தமது இல்லத்திற்கு அழைத்து வந்தார். அவருக்கு ஆசனம் அளித்து வேண்டிய உபசாரம் செய்து, "ஸ்வாமி! எனது செல்வப் புத்திரிக்கு மேக ரோகம் தோன்றி உருக்குலைந்து சொல்ல முடியாத துன்பத்தை அநுபவிக்கின்றாள். மணப்பருவம் வந்தும் மணம் செய்ய இயலாமல் நாங்கள்

படும் வேதனை ஆண்டவனுக்கே தெரியும். நோய் தீர ஏதாவது மார்க்கம் உண்டானால் உரைத்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

"அப்பனே! இந் நோய் பாப கர்மத்தின் மிகுதியால் உண்டாவது. வைத்திய முறைகளால் தீராது. நோய் நீங்குவதற்கு வேறு மார்க்கம் உளது. ஒரு நாளில் லட்சம் அடியார்களுக்கு அமுது செய்வித்தால் கரும வினையின் வலி குன்றி நலம் பெறலாம்" என்றார் அடியார்.

"லட்சம் அடியவர்கட்கு அன்னம் இடும் தகுதி அடியேனுக்கு இல்லையே என் செய்வேன்? என்றார்.

இயலாவிடின் திருமூல நாயனார் திருமந்திரத்தில்

*"தண்டறு சிந்தைத் தபோதனர் தாமகிழ்ந்து*
*உண்டது மூன்று புவனமும் உண்டது*
*கொண்டது மூன்று புவனமும் கொண்டதென்று*
*எண்டிசை நந்தி எடுத்துரைத் தானே*
*வித்தகம் ஆகிய வேடத்தர் உண்டஊண்*
*அத்தன் அயன்மால் அருந்திய வண்ணமாம்*
*சித்தம் தெளிந்தவர் சேடம் பருகிடின்*
*முத்தியாம் என்று நம்மூலன் மொழிந்ததே"*

என்று அருளிய வண்ணம் பிரம்மஞானி ஒருவரைத் தேடி அவருக்கு அமுது செய்வித்தால் மூன்று உலகத்தில் உள்ளவர்களுக்கும் அன்னம் அளித்த பலன் உண்டாகும்.

"ஸ்வாமி! அத்தகைய பிரம்மஞானியை யான் எங்கு காண்பது? ஸ்வாமிகள் தெரிந்திருந்தால் உரைத்தருள வேண்டும்."

"வாஸ்தவம், பிரம்மஞானியைக் காண்பது அருமையே. திருவாரூர் ஓடம் போக்கி ஆற்றின் கரையில் பிரம்மாநுபூதி பெற்ற ஒரு மஹான் இருந்து வருகிறார். அவருக்கு, தில்லை நடராஜர், 'தக்ஷிணாமூர்த்தி' என்ற திருநாமம் வழங்கியுள்ளார். அவருக்கும் பிக்ஷை செய்வித்துப் பரிகலச் சேடத்தைப் பெற்றுப் புத்திரிக்கும் அளித்து நீரும் உட்கொள்வீராயின் கன்மவினை தீர்ந்து சுகம் பெறுவீர்" என்று கூறினார். அப்படியே எதிர்வரும் குருவாரத்தன்று செய்கிறேன். தாங்களும் உடன் வர வேண்டும். இப்போது எளியேனது இல்லத்திலேயே சுவாமிகள் பிக்ஷை செய்து கொள்ள வேண்டும் என வேண்டினர். அம்முனிவரும் இப்போது எனக்கு அமுதிட்டால், ஒருவருக்கிட்ட புண்ணியமாத்திரம் உமக்குக்கிட்டும், எனக்குப்பசி நீங்கும். பிரஹ்ம ஞானியருக்குப் பிக்ஷை செய்வித்து, அப்பிரசாதத்தோடு ஓர் துறவிக்கு அமுதிட்டால் கோடி துறவியருக்கு அமுதிட்ட பலன் கிடைக்கும். உண்டவருக்குப் பசிப் பிணியோடு பாவப்பிணியும் நீங்கும். ஆதலால் குருவாரத்தன்று தக்ஷிணாமூர்த்தி நிவேதனத்தோடு, திருவாரூரில் வந்து பிக்ஷை ஏற்றுக் கொள்கிறேன் என்று கூறிச் சென்றார்.

சுவாமிநாதன் செட்டியார் குடும்பத்தினர் அன்று தொடங்கி விரத சீலர்களாகி, அடுத்த குருவாரத்தில் திருவாரூர் சேர்ந்து, அபிஷேகம், மகேஸ்வர பூஜை ஆகியவற்றிற்கான சாமக்கிரியைகளைச் சேர்ப்பித்து, திருக்குளத்தில் தீர்த்தம் ஆடி ஆசாரத்துடன் கனி வர்க்கங்களைக் கையில் தாங்கி ஸ்வாமிகள் திருமுன்னர் சென்று பலமுறை வலம் வந்து நமஸ்கரித்தனர்.

ஸ்வாமிகள் உபசாந்தமாகச் சித்திர தீபம்போல் அசைவில்லாமல் அமர்ந்திருந்தது. சர்வப் பிரபஞ்சமும் தன்னில் தானாகி நிற்கும் தன்மையினைக் கண்ட சுவாமிநாதன் செட்டியார் பரவசம் அடைந்து மெய் விதிர்ப்ப ஆனந்தக் கண்ணீர் அருவி பெருக நின்று பின்வரும் பதிகத்தைப் பாடினார்.

ஸ்ரீமத் அகண்ட பரிபூர்ண அத்விதீய சச்சிதானந்த சுத்த சைதந்ய சிவ தக்ஷிணாமூர்த்தி குருவே நம:

*வாயினால் வாழ்த்தி நெஞ்சால்*
*வஸ்து நிர்த்தேசம் செய்து*
*காயத்தால் வணக்கம் செய்யும்*
*கருத்துடை அன்பர் முன்பாய்*
*நாயினும் கடையான் ஆகி*
*நான் இருப்பது நன்றாமோ*
*தாயினும் கருணை பூத்த*
*சச்சிதா னந்த வாழ்வே* 1

*மகம்பல புரிந்தும் முன்நூல்*
*மறைபல உணர்ந்தும் ஞானச்*
*சுகம்தனை அடையார் என்றே*
*சொல்லினர் முன்னோர் எல்லாம்*
*அகந்தையை ஒழிக்கும் நின்ஆர்*
*அருளதே வேண்டும் முந்நீர்ச்*
*சகம்எலாம் நிறைந்து நின்ற*
*சச்சிதா னந்த வாழ்வே* 2

*இச்சையைப் பேரா னந்தத்து*
*இடத்தினும் வெகுளி தன்னை*

எச்சமில் அஞ்ஞா னத்தின்
    இடத்தினும் செலுத்தின் அல்லால்
பொய்ச்சழக்கு அறுக்கும் உண்மைப்
    போதம் வந்து உதயம்ஆமோ
தற்சிவ ரூப மான
    சச்சிதா னந்த வாழ்வே

அகம் எனும் விருத்தியால் மெய்
    அறிவுஎனும் விருத்தி யானும்
சகஎனும் விருத்தி என்றன்
    சங்கற்பம் என்ப தாலும்
தகர்ந்திடும் அலது மற்றோர்
    சாதனம் தன்னால் நீங்கத்
தகுமதோ உரைத்தல் வேண்டும்
    சச்சிதா னந்த வாழ்வே

கனவிடைச் சூழ்ந்த வெந்தீ
    கண்விழித் தளவில் நீங்கிப்
பினைஉறா ததின்முத் தாபப்
    பெருந்தழல் அருளால் தன்னைக்
கனபரி புரணா னந்தக்
    கண்ணதாக் கண்டால் அன்றித்
தனைவிட வற்றோ சொல்வாய்
    சச்சிதா னந்த வாழ்வே

நாடகச் சாலை நாப்பண்
    நாட்டிய கம்பம் போலக்
கூடகத்து இருக்கும் தம்மைக்
    குறித்துமெய்ஞ் ஞாநா னந்த

வீடகத்து இருக்க வல்லார்
விறைநறவு உமிழுங் கஞ்சத்
தாடலை அணிவன் கொல்லோ
சச்சிதா னந்த வாழ்வே 6

புனல்கனல் உறுமண் மாரி
பொழியினும் புயல்கள் கூடித்
தனதுஇயல் வழுவா விண்போல்
சத்துவ ரசோ தமத்தின்
இனம்உறு தொழில்களால் தன்
இயல்வழு வாது இருக்கும்
தனிநிலை நிற்பது என்றோ
சச்சிதா னந்த வாழ்வே 7

இமைப்பினும் விரிப்பினும் கூர்
இருளைஓர் படித்தாய்க் காணும்
நிமைக்கருங் கண்போல் தன்னை
நினைப்பினும் மறப்பினும் தான்
சமத்துவம் ஆகக் காணும்
தத்துவ ஞாநந் தன்னைச்
சமைப்பதிங் கெனக்கெக் காலம்
சச்சிதா னந்த வாழ்வே 8

முற்பத விசாரம் தன்னால்
மூவித உடல் வேறாக்கித்
தற்பத விசாரம் தன்னால்
சகலமும் மித்தை யாகி
கற்பனை அனைத்தும் அந்தக்
கடைப்பத விசாரம் தன்னால்

*தற்பரம் ஆக்கல் என்றோ*
*சச்சிதா னந்த வாழ்வே* 9

*மமர்ஒழித்து அருளும் நிற்கே*
*மாறுயான் செய்வது என்னே*
*கமலநல் சரணம் என்தன்*
*கருத்திடை இருத்தல் அன்றித்*
*தமர்ஒடும் திருவா ரூரில்*
*தக்ஷிணா மூர்த்தி என்னும்*
*சமரச குருவாய் வந்த*
*சச்சிதா னந்த வாழ்வே* 10

பதிகம் பாடி முடிந்ததும், ஸ்வாமிகள் திருக்கண் திறந்து செட்டியாரை நோக்கிற்று. செட்டியார் அந் நோக்கில் தன்னையும் சூழ்நிலையையும் மறந்து, வினைத் தளைகள் அகல, ஆத்மாநுபவத்தில் லயித்து நின்றார். சிறிது நேரம் சென்றது. செட்டியாருக்கு மீண்டும் விருத்தி வெளிப்பட, இன்னதென்று விவரிக்க முடியாத தம் அநுபவத்தை மீண்டும் மீண்டும் நினைந்து மனம் உருகித் தாம் கருதிவந்த காரியத்தையும் மறந்து மௌனமாக நின்றார். அருகில் உள்ளவர்கள் செட்டியாருக்கு அவருடைய புத்திரியின் நோய் பற்றித் தூண்டுதல் செய்தபின் ஒருவாறு தன் நினைவு பெற்று, ஸ்வாமிகளைப் பன்முறை வலம் வந்து நமஸ்கரித்து, தமது புத்திரிக்கு உண்டாய பிணி நீங்கக் கருணைபாலிக்க வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டார்.

அருகில் கைகூப்பி நின்ற புத்திரியை நோக்கி ஸ்வாமிகள், “என்னடி வேண்டும்? என்னடி வேண்டும்? எனப் பலதரம் சொல்லி அவள் தேகத்தின் மீது காறி, உமிழ்ந்தது. விசாலாட்சிக்குப் புத்தி தெளிவு பெற்றது.

விவேகம் உண்டாயிற்று. "உன்னடி வேண்டும்! உன்னடி வேண்டும்!" என்று ஸ்வாமிகளின் திருவாய் அமுதினைக் கையில் ஏந்தி அமிர்தமாக உட்கொண்டதோடு, சரீரம் முழுமையும் களபக் குழம்பாகத் தடவிக் கொண்டாள்.

ஸ்வாமிகள், "அடி வேண்டில் நோய் பொடியாய் உதிரும்" என்று அருளிற்று.

சகிக் கொணாதிருக்க தினவு அக்கணமே நின்றதோடு, அப்பெண்ணுக்கு விவேகமும் கை கூடிற்று. திருப்பணி ஸ்வாமிகள் விதிப்படி ஸ்வாமிகளுக்கு அபிஷேகம் செய்து விபூதிக் காப்புச் சாத்தி நறுமண மலர்களால் அலங்கரித்து, மடத்துக்குப் பக்கத்தில் உள்ள "மகாபாப நிவாரணத் தீர்த்தத்தில்" விசாலாட்சியை நீராடச் செய்து ஸ்வாமிகள் ஆராதனைக்கு வேண்டிய நிவேதன வகைகளை, அவள் கையாலேயே படைக்கும்படி செய்து ஸோடஸ உபசாரங்களுடன் ஆராதனை நடத்தினர். சந்நிதியிலிருந்த விபூதியை எடுத்துத் தானும் அணிந்து கொண்டு தரிசனத்துக்கு வந்திருந்த அன்பர்கட்கும் வழங்கினார்.

செட்டியார் குடும்பத்தினர் மிகவும் பயபக்தியுடன் குறிப்பறிந்து சுவாமிகளுக்குப் பிக்ஷை செய்வித்து எஞ்சிய பரிகல சேடத்தைத் தேவாமிர்தமாகப் பாவித்து, வந்திருந்த துறவியர்கட்கும் மற்றும் அனைவருக்கும் அருட்பிரசாதத்தோடு உணவு வகை படைத்து மூவரும் உட்கொண்டனர். மாலையிலும் ஆசாரத்துடன் வந்து ஸ்வாமிகளுக்கு வழி பாடாற்றி, பால், பழம் முதலியவற்றை நிவேதனம் செய்து சுவாமிகளின் சேடத்தை உட்கொண்டு, ஸ்வாமிகளின் திருவடிகளையே சிந்தித்துத் துயில் கொண்டனர்.

கருவுற்று வருந்தாது விரும்படியார் சிந்தனையிற்
கரும்பே யென்னத்
திருவுற்று விளங்கு சிவ சொரூபமே செல்வமுடைத்
திருவாரூரில்
ஒரு பற்றுமின்றிச் சித்தருருவு கொடு வுலகறிய
வொருமையாகத்
திருமடமென் புறந்தனிலே தெக்ஷிணாமூர்த்தி யெனத்
திகழ்ந்த தன்றே.



## ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி சுவாமிகளின் அஷ்டோத்திர மந்திரம்.

ஓம் அகண்டாய நம :

ஓம் அகர்தரே நம :

ஓம் அகாமாய நம :

ஓம் அகாரணாய நம :

ஓம் அஹேயாய நம :

ஓம் அக்ரோதாய நம :

ஓம் அஸங்காய நம :

ஓம் அஸம்ஸாரிணே நம :

ஓம் அசரீரிணே நம :

ஓம் அசலாய நம : 10

ஓம் அச்யுதாய நம :

ஓம் அக்ஷராய நம :

ஓம் அணவே நம :

ஓம் அத்வயாய நம :

ஓம் அநந்தாய நம :

ஓம் அநாதயே நம :

ஓம் அநாதிமுக்தாய நம :

ஓம் அநாவ்ருதாய நம :

ஓம் அநுபாதேயாய நம :

ஓம் அநூதனாய நம : 20

ஓம் அநேகரூபாய நம :

ஓம் அபயாய நம :

ஓம் அபரிச்சின்னாய நம :

ஓம் அபரேக்ஷாய நம :

ஓம் அபேதாய நம :

ஓம் அபோக்த்ரே நம :

ஓம் அப்ரமேயாய நம :

ஓம் அப்ர விருத்தாய நம :

ஓம் அப்ராணாய நம :

ஓம் அமனஸே நம : 30

ஓம் அம்ருதாய நம :

ஓம் அலோபாய நம :

ஓம் அவ்யாஹ்ருதாய நம :

ஓம் ஆதயே நம :

ஓம் ஆத்மநே நம :

ஓம் ஆனந்த ரூபாய நம :

ஓம் உந்நதாய நம :

ஓம் ஏகரூபாய நம :

ஓம் காரணாய நம :

ஓம் கூடஸ்த்தாய நம : 40

ஓம் ஸத்யாய நம :

ஓம் ஸத்ரூபாய நம :

ஓம் சம்பவே நம :

ஓம் ஸர்வகாரணாய நம :

ஓம் ஸர்வகதாய நம :

ஓம் ஸர்வஸமாய நம :

ஓம் ஸர்வஜ்ஞாய நம :

ஓம் ஸர்வதோமுகாய நம :

ஓம் ஸர்வாகாராய நம :

ஓம் ஸர்வதாராய நம : 50

ஓம் ஸர்வாதிஷ்டானாய நம :

ஓம் ஸர்வாத்மனே நம :

ஓம் ஸர்வாபாவாய நம :

ஓம் ஸாக்ஷிணே நம :

ஓம் சாந்தாய நம :

ஓம் சிந்மாத்ராய நம :

ஓம் சிவாய நம :

ஓம் சுத்தாய நம :

ஓம் ஸ்வப்ரகாசாய நம :

ஓம் ஸ்வயம்பிரகாசாய நம : 60

ஓம் ஸ்வயாய நம :
ஓம் சூன்யாய நம :
ஓம் க்ஷேத்ரஜ்ஞாய நம :
ஓம் ஜ்ஞானஸ்வரூபாய நம :
ஓம் ஸ்தாணவே நம :
ஓம் த்ருகஸ்வரூபாய நம :
ஓம் நாநாரூபாய நம :
ஓம் நிஷ்கிரியாய நம :
ஓம் நிஷ்ப்ரகிருதயே நம :
ஓம் நிஷ்ப்ரபஞ்சாய நம : 70
ஓம் நித்தியமுகதாய நம :
ஓம் நித்யானந்தாய நம :
ஓம் நித்யாய நம :
ஓம் நிரஞ்ஜனாய நம :
ஓம் நிரவயவாய நம :
ஓம் நிராகாராய நம :
ஓம் நிராதாராய நம :
ஓம் நிரிந்த்ரியாயா நம :
ஓம் நிரீச்வராய நம :
ஓம் நிருபத்ரவாய நம : 80
ஓம் நிரூபாய நம :
ஓம் நிர்குணாய நம :
ஓம் நிஸ்ஸம்பந்தாய நம :
ஓம் நிர்ஜீவாய நம :

ஓம் நிர்தோஷாய நம :
ஓம் நிர்பந்தாய நம :
ஓம் நிர்மலாய நம :
ஓம் நிர்லேபாய நம :
ஓம் நிர்விகலாய நம :
ஓம் நிர்விகாரிணே நம : 90
ஓம் நிர்விசேஷாய நம :
ஓம் நிர்விஷயாய நம :
ஓம் நிர்விருதாய நம :
ஓம் பரமானந்தாய நம :
ஓம் பராமர்த்தாய நம :
ஓம் பரிபூரணாய நம :
ஓம் ப்ரதயக்ஸ்வரூபாய நம :
ஓம் ப்ரத்யக்ஷாய நம :
ஓம் ப்ரஹ்மணே நம :
ஓம் புத்தாய நம :
ஓம் புராதனாய நம : 100
ஓம் மஹதே நம :
ஓம் மஹாசூன்யாய நம :
ஓம் மனோவாசாமகோசராய நம:
ஓம் முத்தாய நம :
ஓம் யதார்த்தவஸ்துனே நம :
ஓம் வஸ்துனே நம :
ஓம் விபவே நம :

ஓம் ஸ்ரீமத் அகண்ட பரிபூர்ண ஸ்ச்சிதாணந்த அத்வைத
ஜோதி சொரூப ஸத்குரு ஸ்வாமினே நமோ நம :
நானாவித மந்த்ர பரிமள பத்ர புஷ்பாணி ஸமர்பயாமி நம :
ஸ்வரூபாஷ்டோத்ரம் ஸம்பூர்ணம்.